...சான காகிதப்பதிப்பு.
...பிரதி, 5½ அணா.
...பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்,
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2





...பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*...shing Agency reserves to ... the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*


[...கம் 10.] 1902ஹு ஏப்ரல்மீ. [இலக்கம் 12.


## ...f Subscription to the 'Viveka Chintamani.'

...ick Paper Edition for Patrons, Reading ... School and Circulating Libraries, &c.
...nimum Subscription Rs. 5 per annum.
...ngle Copy 7½ As.: Back Nos. 8 As. each.
... & FOREIGN SUBSCRIPTION 7*s*. 6*d*. NET PER ANNUM.

...hin Paper Edition for the People:—
...SCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.
... COPY, CURRENT NO. 5½ AS.; BACK NOS. 6 AS. EACH.
...LISH & FOREIGN SUBSCRIPTION 5*s*. 6*d*. NET PER ANNUM.

...strictly Prepaid at the commencement of ...m, (*i. e.*, in May of each year) 8 As. discount, ... annual rate, and 4 As. off the half-yearly rate.
...ptions entered to begin with only April or May of each year. ...Subscribers may not withdraw except at the end of the year.

...To regular annual subscribers 2 months' grace ...wed for the prepayment of subscription, and in ...se of regular half-yearly subscribers 3 weeks' ... within which all subscriptions should be paid ...title them to the discounts allowed.

...bscriptions cannot be closed in the middle of a ...*ume*, though regular subscribers may elect to pay ...r subscriptions in half-yearly instalments. *All ...ces for discontinuance are to be given in the ...nning of the new year, i. e., in April or May; for ...rwise one should have to pay for the whole of the ...rent volume.* Outstanding subscriptions are often ...ised by V. P. P. to prevent accumulation of ...ars.

...all business correspondence, Subscribers are re...sted to quote their register number found on the ...pper, as it would ensure prompt attention and ... vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளயான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## ஓர் விண்ணப்பம்.

இந்த சஞ்சிகையோடு விவேகசிந்தாமணியின் 10-வது வருஷம் பூர்த்திபாகிறது. இந்த வருஷம் விவேகசிந்தாமணிக்கு நேர்ந்த அரிய பலசங்கடங்களினால் அதைத் தடையின்றி நடத்திவருவது மிகவும் கஷ்டமாய்விட்டது. அதற்கு நேர்ந்த அரிய பல இக்கட்டுகளை வெல்ல அதற்குள்ள மனுஷ சகாயம் பொருள் சகாயம் சிறிதும் போதாது தத்தளிக்க நேரிட்டதாயினும் அவ்வாபத்காலத்தை அது எப்படியோ தள்ளிக்கொண்டு சமாளித்து இந்தமட்டும் அது மறையாது நடைபெற்று வந்தது மிகவும் வியக்கதக்கதே. விவேகசிந்தாமணி இவ்வளவு உரம்பெற்றுள்ளதாகக் காட்டியது அதை வாங்கி வாசித்தாதரிப்போர் அதை நடத்துவோர் ஆகிய இருவகையாருக்கும் சந்தோஷமுண்டுபண்ணத்தக்கதே. இப்பொழுது சென்ற வருஷத்துப் பட்ட கடன்களைத் தீர்க்கவேண்டியதோடு அடுத்த வருஷத்துப் பத்திரிகை சரிவரநடக்க முன்னேற்பாடு செய்யவேண்டியதவசியமாயிருப்பதால் இதைவாசிப்போர் இந்த வருஷமுடிவு வரையிலுள்ள சந்தாபாக்கியோடு அடுத்த மேமீ துவக்கும் புது வருஷத்துக்குள்ள சந்தாத்தொகையையும் முன் பணமாகச் செலுத்தி யாதரித்தால் பல கஷ்ட நஷ்டங்களுக்குட்பட்டு இப்பத்திரிகையைத் தொடுபிடியாய்த் தொட்டுக் கைவிடாது நடத்திவர வுழைப்போர்க்கு உற்றசமயத்துச் செய்ததோர் பேருதவியாக விருக்கும். நமது சந்தாதாரர்களும் மற்றப்படி நமது பத்திரிகையில் அபிமானமுள்ள நண்பர்களும் தாங்கள் ஆதரித்து வருவதோடு தங்கள் நேசர்களையும் இப்பத்திரிகையை வாங்கி யாதரித்துவரத் தூண்டுவார்களானல் பத்திரிகை யெங்கும் பரவி நல்லாதரவுபெற்று வருவதால் பத்திரிகையை நடத்துவோர் உற்சாகத்தோடு மேன்மேலும் அது விர்த்திபெற உழைத்துவரச் சாதகமாகும். இவ்வுதவியை நம் பத்திரிகாபிமானிகள் ஒவ்வொருவரும் ஹிருதயபூர்வகமா[illegible]குச் செய்துவரப் பின்னடையார்களெ[illegible] உறுதியான நம்பிக்கையின்பேரிலே இ[illegible]ணப்பம் செய்துகொள்ளலானோம்.

---

READINGS AT HOME.

A GLIMPSE INTO THE FUTURE.

SECOND SERIES.

MUDRA RAKSHASA OR CHANAKYASUT[illegible]

A ROMANCE OF THE MEDIEVAL TIME[illegible]

2ND DAY.

---

இல்லப்படிப்பு-வருங்கால திருஷ்டி.

## முத்திராராக்ஷசம் என்னும் சாணக்கிய சூத்திரம்.

2-ம் நாள் படிப்பு.

இரண்டாம் நாள் வழக்கம்போல் நால[illegible] வந்து சேர்ந்ததும் சிவகாமி பின்வருமாறு [illegible]கத்தொடங்கினாள்.

"இவ்வாறு, ராஜகுமாரர்கள் ஒன்பதுபே[illegible]ளும் இராஜ்யத்துக்கு அதிபதிகளாக நிய[illegible]கப்பட்டதனாலே இராஜ்யம் பகுநாயகமாயி[illegible]பினும், மந்திரிகளின் சாமர்த்தியத்தினா[illegible] அதற்கு யாதும் குறைவுண்டானதில்லை. [illegible] காலத்தில், மௌரியனுக்கு சௌரிய பராக[illegible]மங்களில் ஒருவர்க்கொருவர் தாழ்வில்லா[illegible]ராய் நூறு புத்திரர் உண்டாயினர். அவனு[illegible] அப்புத்திரரிடத்து மிக்க பிரீதியுடையவனா[illegible] அவர்களுக்கு அஸ்திரசஸ்திரங்களாகிய ஆ[illegible]தப்பயிற்சி செய்வித்து அவற்றில் மிக்க தேர்[illegible]சியை அடைவித்தனன். அந்நூறு புத்திரர்க[illegible]ளும் கடைசியவனுக்குச் சந்திரகுப்தனென்[illegible] பெயர். இவன் வயதில் மற்றவர்களுக்கு இளை[illegible]யனாயினும் குணத்தின் மேன்மையினால் ம[illegible]றெல்லோருக்கும் மூத்தோனென்று சொல்ல[illegible] தக்கவனாயிருந்தனன். இவன் தனது பராக்[illegible]ரமத்தினால் ராஜ்யத்தின் பற்பலபாகங்களையு[illegible] தன் வசப்படுத்திக் கொண்டனன். அரசர்கள்

...தாறும் மாறிமாறி வருதலினாலே ...வலி நாளுக்குநாள் குன்றிப்போயிற்று. ...தியின் ஸ்தானம் நிலையாயிருத்தலி...ம், மௌரியன் தான் மானுதி குணங் ...ய புத்திரர்களைப் பெற்றிருத்தலி..., யுக்தியிலும் நீதியிலும் சிறந்திருத்த..., அவனது அதிகாரம் நாளுக்கு நாளும் ஓங்கி ...ப்பற்று நந்தராஜ்யத்திற் பெரும்பான் ... அவன் வசமாய்விட்டது.

...போது, அரசர்களுக்கும் ராக்ஷஸாதி மந் ...களுக்கும் மௌரியன்மீதும் அவன் புத் ...ம் பொறுமையும் பகையும் மீறி, அவர் ...கெடுக்கும் வழிகளைப்பற்றிப் பலகால் ...ாக ஆலோசிக்கலாயினர். "ஆகா! ...கஷ்டம்! நாம் அனுபவிக்கவேண்டிய ...மானது, ஜாரபுருஷனுக்கு வசமாகிய ...ரியைப்போல, மௌரியனுக்கு வசமா... இது எவ்வளவு வெட்கமானது! அர...ம் மந்திரிகளும் இன்று ராஜ்யத்தை ...வருங் காலத்தேயும் ராஜ்யம் பிருத்திய ... வசமானது எத்தனை மானக்கேடு? ...ா முன்னம் இவன் நம்மேற் பகைமேற் ...டு அதனைக்குறிப்பாலுணர்த்தவும், அறி...ளாகிய நமக்கு அது தெரிந்ததில்லையே! ...ாது இவனுக்குப் புத்திரபௌத்திராதிக ...ர்த்தனையாயிருத்தலின், இவன் நமக்குச் ...ருவாவானென்பது நிச்சயம். இவனை ... நாம் கொன்று நீக்காவிடின், இவன் நம் ... கொலைசெய்வானென்பதிற் சந்தேக...ல. இவனோடெதிர்த்து வெளிப்படையா...போர்செய்யின், இவனுக்கு அனைவரும் ...தீனமாயிருத்தலினாலே இவனைச் செயித்த...ு. ஆதலின், இவனை யாம் மோசடியாகவே ...ல்லவேண்டும். அதுவும் சீக்கிரத்திற்செய் ...வேண்டும்."—என்று ஆலோசித்து ராக்ஷ... மந்திரிமார்கள் சென்று, பூமிக்கடியிற் ...கம் செய்வித்து, அதில் ஓர் மந்திரமண்ட... நிருமித்தனர். அக்குகைக்குச் செல்லும் ... நீண்டு குறுகிப் பாதாளம்போல ஆழமாகி ...ப்பினும், அதனுள்ளிடம் மிக்கவும் இடம கன்று விசாலமாகியிருந்தது. இச்சுரங்கத்துள் அரசர்கள் மந்திரிமார்களோடு சென்று பன் முறை ஆலோசனை செய்துவந்தனர்.

அக்காலத்தில் ஒருநாள், ஒரு சேவகன் வந்து மௌரியனை நோக்கி, "மந்திரமண்டபத்தில் அரசர்கள் எல்லோரும் மந்திரிமார்களோடும் காரியவிசாரம் செய்யலுற்றனர். உமது வரவை எதிர்நோக்கி இருக்கின்றனர். ஆதலின் நீரும் உமது மைந்தருங்கூடி தாமதமின்றிச் செல்வீராக." என்று கூறினன். அது கேட்டு மௌரியன் தன் தனயர்களோடு வெகு சம்பிரமமாகச் சென்று, வழக்கம்போல மண்டபத்தின் உள்ளே அரசர்கள் இருப்பர்கள் என்று கருதி உள்ளே சென்றனன். அவர்கள் உள்ளே சென்றதும், அரசன் சேவகர்கள் அந்தக் குகைத்துவாரத்தைக் கற்களால் அடைத்து விட்டனர். விதியின் வசத்தை நீக்கவல்லவர் யாவர்?

இவ்வாறு குகாத் துவாரத்தை அடைத்துவிட்டது கண்டு, மௌரியனும் புத்திரர்களும் மிக்க துயரத்தோடு அக்குகையின் உள்ளே சென்றுபார்த்த அளவில், அங்கு மன்னரும் இல்லை; மந்திரிகளும் இல்லை. அதுவும் அன்றிச் சில கோலைக் குறிகளையும் அங்கு வைத்திருக்கக் கண்டனர். போஜன பதார்த்தங்களால் நிறைந்த பரிகலங்கள் நூறும் ஒவ்வொன்றுக்கும் எதிராக தனித்தனி ஒவ்வோர் விளக்கும் காணப்பட்டன. இவற்றைக் கண்டபோது, அவர்க்குண்டாகிய சங்கடம் சொல்லி முடியுமா? கண்களினின்றும் கண்ணீர் ஒழுகப் பலவாறு பிரலாபித்து, ஒருவரையொருவர் சோகத்தோடு தழுவிக்கொண்டு, "ஐயோ! நம்மைக் கொடிய மந்திரிகளும் மன்னர்களுங் கூடி இவ்வாறு மோசம் செய்தார்களே! அவர்கள் இவ்விதக்கொடுமை புரிவதற்கு யாம் அவர்க்குச் செய்த பிழைகள் ஒன்றையுங் காணோமே. நமது பாடுண்டு பரப்புண்டு என்று நம்முடைய காலங்களெல்லாம் முயன்றிருந்தோமேயன்றி, நாம் ஒரு வன்புக்கும் போக

வில்லையே. நிலவறையின் உள்ளே மந்திர மண்டபம் நிருமித்ததும், கொடியவர்கள் ஆகிய அவர்களது மந்திரயோகங்களும், பின்பு நம்மோடு சேவகன் வந்து கூறியது, இவையாவும் நம்மைச் சதிசெய்யச் செய்த சர்ப்பனைகள் என்று அறிந்தோமில்லையே. இவர்களுக்கு நம்பாலன்பில்லாவிடின், இவ்வாறு மோசடியாகக் கொல்லலும் வேண்டுமோ? என்று பலவாறு சொல்லி வருந்தியகாலத்து, முராசுதன் அவரைப் பார்த்துச் சொல்லுகின்றான். "என்னருமை மைந்தர்காள், நாமிவ்வாறு அதைரியப்பட்டு மயங்குவதிற் பயனில்லை. தைரியத்தை மேற்கொண்டு மேலாற்செய்வதை ஆலோசித்தல்வேண்டும்" என்று, பின்பு சிறிது ஆலோசித்து மக்களை நோக்கிப் பின்னும் சொல்லுகின்றான். "இதில் நின்று தப்பி வெளிப்படுதற்கு மார்க்கம் யாதுங்காணோம். ஆயினும், தெய்வ இச்சை இன்னதென்று யாம் சொல்லப்போகா தாதலினாலே, யான் சொல்லும் மொழியை நீங்கள் மனமொப்பிக்கேட்கவேண்டும். இப்போஜன பதார்த்தங்களை ஒன்றாகத் திரட்டி ஒரு பாத்திரத்தில் வைத்துப் பத்திரப்படுத்தித், தீபங்களையும் ஒன்றுதவிர மற்றெல்லாவற்றையும் நிறுத்திவிட்டு, நம்மில் ஒருவன் மாத்திரம் உயிர்தரித்திருத்தல் வேண்டும். நூறுபேர்களுக்கும் ஏற்படுத்தியுள்ள உணவுகள் அவ்வொருவன் உண்டு ஒடுங்கு முன்னமே தெய்வவசத்தால் இக்குகையினின்றும் வெளிப்படுதற்கு ஓர் மார்க்கம் உண்டாயின், அவன் சத்துருவர்க்கத்தை நாசஞ்செய்யப் பிரயத்தினம் செய்தல்வேண்டும்" என்றனன். இவ்வாறு கூறிய பிதாவின் வார்த்தைகளைக் கேட்டபோது, அவர்களில் ஒவ்வொருவனும் தனது சகோதரர்களும் தந்தையும் ஒவ்வொருவராய் மரித்தல்கண்டு வருந்துயரங்களைச்சகித்திருப்பதற்கும் தெய்வகதியா வெளிப்பட்டமாத்திரத்தில் தந்தைகூறிய பிரதிக்கிரியை செய்தற்கும் சக்தியில்லாதவனாய் ஒன்றும் உரையாடாமல் இருந்தனன். அப்போது அனைவர்க்கும் தம்பியாகிய சந்திரகுப்தனைத் தந்தை துக்கத்தோடு நோக்கலும், அவன் தைரியமா... வாறு சொல்லினன் "எந்தாய்! உமக் ... சில் ஏதும் விசனம் வேண்டாம். நீர் ... வியவாறு யான் செய்வன். இதில் யா... சயமில்லை. ஜீவனோடு இக்குகையில் ... வெளிப்படுவதற்கு ஒருமார்க்கம் உ... யின் பிரதிக்கிரியையும் துணிந்து செ... அன்றியும் இந்த இராஜ்யத்தையும் ப... கையினின்று பறித்துப் பரிபாலித்திருப்... என்றனன். இவ்வாறு சந்திரகுப்தன் ... மாற்றங்களைக்கேட்டுத் தந்தையும் த... மாரும் சந்துஷ்டியடைந்து, அவனை எல்... காடமாய்த் தழுவிக்கொண்டு, தமது க... ரால் அவன் முடியில் அபிஷேகஞ்செய்... னுக்கு அனேக ஆசிமொழிகளையும் சொ... கள். "மைந்த, நீ நெடுங்காலம் சிரஞ்சீ... வாழ்ந்திருப்பாயாக. சத்துருக்களை ... கொள்வாயாக; உனக்கு விசேஷ படைத்... யில்லாவிடினும் சத்துருவர்க்கங்களை நீ... செய்வாய் என்பதிற் சந்தேகமில்லை" எ... னர். சந்திரகுப்தனும் அவ்வாறே தை... தைக் கைக்கொண்டு அக்குகையில் வை... ருந்த உணவுகளை உண்டு அதில் இருக்... காலையில் மற்றவர்கள் யாவரும் சிலநாளைக்... லாம் உணவில்லாமையினாலே உயிரிழந்த... மௌரியனை இவ்வாறு மைந்தர்களோடு ... மோசடியாகக் கொடுமையிற் கொலை... விருத்தாந்தத்தைக் கேட்டு நாட்டில் உ... வர்களெல்லோரும் மனம்வருந்தி இராஜ... னாலே அதை வெளியிடுதற்கு அஞ்சியிரு... னர். நந்தராஜாக்களைத் தவிர மற்றொருவ... கும் மௌரிய வமிசத்தை நாசஞ் செய்ததி... எள்ளளவேனும் மகிழ்ச்சியுண்டானதில்லை.

இவ்வாறு மூன்றுமாதங்கள் ஆனபின்பு க... கதேசாதிபதியால் அனுப்பப்பட்ட சில தூ... கள் கூட்டிலடைத்த சிங்கம் ஒன்றை எ... துக்கொண்டு நந்தராஜாக்களுக்கு முன்... வந்து, "ஏ அரசர்காள் நாங்கள் வங்கதேசா... பதியால் அனுப்பப்பட்டு வந்தவர்கள். இ... கூட்டில் உள்ள சிங்கத்தைக் கூட்டை உடை

வெளியே எடுக்கவேண்டும். இதைச் வல்லவர்கள் இந்த ராஜசபையில் இருக் ர்களா என்று அறியும்படி விடுத்திருக் ன்'' என்றனர். அரசர்கள் மந்திரிக நெடுநேரம் ஆலோசித்தும் அது முடி போனபோது அம்மந்திரிகளிலொருவனு சிகன் என்பவன் அரசரைநோக்கி வேளையில் சந்திரகுப்தன் மாத்திரம் தானுயின் இக்காரியம் எவ்வளவு சுலப முடிந்திருக்கும்! அவன் சிற்ப சாஸ்திரம் மும் கரைகண்டவன். இதற்கு யாதேனும் பாயம் நிச்சயம் செ திருப்பான். இப் எண்ணி என்னட ன்'' என்றனன். போது அரசர்கள் ஆற் ஏடேபோகிறவன் ம்புல்லையும் பிடித்துக்கொள்வா னென் பழமொழிக்கேற்ப ஒருவேளை சந்திரகுப் உயிரோடிருந்தாலும் இருக்கலாமென்று த்து அக்குகாமுகத்தைத் திறந்து உள்ளே று பார்த்தனர். சந்திரகுப்தன் உயிரோ ப்பினும் மிகமெலிந்து தோலும் எலும்பு த்தோற்றினன். அவனைக்கண்டதும் அர கள் சந்தோஷமடைந்து, "ஓ மைந்த உன் நடெங்களுக்கு யாதும் பகையில்லை நீ இனி ளியேவருக'' என்றனர். சந்திரகுப்தனுக் கடைசியில் நமது பிராணனைக் காப்பாற் கொள்ளவும் பழிக்குப்பழிவாங்கவும் வழி ந்ததே யென்று உள்ளுள்ளே சந்தோஷமே பினும் மேலுக்கு இஷ்டமில்லாதவன்போல சர்களைக் கோபத்தோடு நோக்கி, "என் நமைத் தந்தையையும் அண்ணன்மாரை இழந்து எனக்கினி உயிர்பெற்றிருப்பதில் ன்னபயன். அவர்களோடு இக்குகைக்குள் ங்கள் சாப்பனையில் வந்ததுபோல அவர்க ளாடு என்பிராணனையும் விட்டுவிடுகின்றேன். வர்களைப் பட்டினியிட்டுக் கொடுமையாகக் ான்ற பாவிகாள் நீங்கள் என்னையும் வெட் க்கொன்றுவிடுங்கள் எனக்கு வாழ்நாள் துக்கு?'' என்றனன். அரசர்கள் பலவாறு யந்து சொல்லியும் கேளாததனுல் சாட்சியா த் தாங்கள் மௌரியனிடத்துக் கவர்ந்து கொண்ட திரவியங்கள்யாவும் அவன் முன் கொண்டுவந்து வைத்து, "நீ எங்களிடத்தில் வைத்த கோபத்தை மாற்றவேண்டும். இனி மேல் உனக்கும் எமக்கும் பகையில்லை. எப்படி யாவது நீ வெளியேவந்து எங்களுக்கு நேர்ந்த இடுக்கணைத் தீர்க்கவேண்டும்'' என்றனர். அவனும் ஆறினவன்போலச் சமாதானப்பட்டு வெளியே வந்தனன்.

பின்பு அரசர்கள் சந்திரகுப்தனுக்கு வங்க தேசாதிபதி யனுப்பிய சிங்கக் கூட்டைக் காட்டி அதன்வரலாற்றையும் சொல்ல அவன் அதிசயமுற்றுப் புன்சிரிப்போடே இவ்வாறு ஆலோசிக்கலாயினன். இச்சிங்கம் உண்மை யான சிங்கமேயாயின் இக்கூட்டைப் பிரிக்கா மல் வெளிப்படுத்துதல் அசாத்தியம். ஆதலின் இதில் ஏதோ சூதொன்றிருக்கின்றது. சிங்கத் தின் சேஷ்டைகளைப் பார்த்தால் சுபாவமாகத் தோற்றவில்லை. ஏதோ யந்திரத்தினல் இயங் குவதுபோலுள்ளது. அன்றியும் இச்சிங்கத் தின் வர்ணம் ரோமம் முதலானவற்றை உற்று நோக்கும்போது இது உயிருள்ள உண்மைச் சிங்கமாகத்தோற்றவில்லை. சிற்பிகளால்செய் யப்பட்டதுபோலுள்ளது. இது ஒருவேளை மெழுகினலே அமைக்கப்பட்டிருப்பினும் ஆகும்'' என்று ஊகித்துப் பின்பு யாவரும் கண்டு அதிசயிக்கும்படிக் கூட்டை உயர்ந்த தோரிடத்தில் வைக்கச்செய்து இருப்புக்கம்பி யைப் பழுக்கக்காய்ச்சிக் கழிகளினிடையே கூட்டிற்செலுத்திச் சிங்கத்தின் உடம்பில் வைத்தமாத்திரத்தில் அது அவ்வளவும் உருகி யோடியது. அதைக்கண்டு அரசர்முதலானோர் அனைவரும் கைகொட்டிச் சிரித்தார்கள். மந் திரிகளும் ஜனங்களும் சந்திரகுப்தன் யுக்திபுத் தியை மெச்சி அவனை வெகுமானித்தார்கள். வங்கதேசாதிபதியின் தூதர்களும் அரசர்க ளால் வேண்டிய வரிசைகளைப்பெற்றுத் தம்மூ ருக்குச்சென்று தம்மரசனோடு நடந்த விருத் தாந்தங்களைச் சவிஸ்தாரமாகக்கூறினர்கள்.

பின்பு சந்திரகுப்தனைக்கொண்டு தந்தைக் கும் தமையன்களுக்கும் உரிய கடன்களைச்

செய்வித்து,ராக்ஷசனும்அரசர்களுமாக ஆலோசித்து இவ்விதமான உபாயங்கள்வேண்டிவந்த காலத்தில் சந்திரகுப்தன் நமக்கு மிக்க சாதகமாவானாதலின் இவனை நாம் பரிபாலித்தல் கடன். ஆயினும் இவனை அசுவமுதலிய சேனைகளுக்கு அதிபதியாக நியமிக்கின் தீங்குண்டாகும். யாதொரு உத்யோகமும் கொடாவிடினும் நன்றாயிராது. ஆதலின் இவனை அரண்மனையில் போஜனத்துக்குவரும் பிராமணர்களில் அக்கிரபோஜனத்துக்கு யோக்கியமானவர்களைத் தெரிந்தனுப்பும் உத்யோகத்தில் வைப்பதே நலம்" என்று தீர்மானித்து அவ்வாறே செய்தனர். சந்திரகுப்தனும் அவ்வேலையில் இருந்துகொண்டு தந்தையையும் தமயன்களையும் நினைந்துநினைந்து வருந்தி நமக்குப் பழிவாங்க எப்போது சமயம்வாய்க்குமென்று கருதி தினந்தோறும் வருகின்ற அந்தணர்களில் புத்திசாலியாயுள்ளவர்களோடு சிநேகம்செய்து சக்தியினால் சாதிக்கமுடியாததொன்றை புத்தியினால் அடையலாமென்றெண்ணியிருந்தனன்.

தாத்தா.—சந்திரகுப்தன் தாழ்வில்லையே; வெகு புத்திசாலியா யிருக்கின்றானே. அவனுக்குத்தோன்றிய இந்தச் சுளுவு வேறொருவருக்கும் தோன்றாதது என்ன ஆச்சரியம். நிற்க, இப்பொய்ச்சிங்கத்தை அனுப்பின வங்கதேசாதிபதியின் உத்தேசமென்ன?

ருக்மணி.—சத்தியிலும் புத்தியே விசேஷம் சத்தியினால்வெல்லக்கூடாததொன்றைப் புத்தியினால் வெல்லக்கூடுமாதலின் ஒரு தேசத்தரசர் இன்னொரு தேசத்தரசரை வெல்லக்கருதின் அவ்வரசனிடத்தில் புத்திசாலிகள் எவரேனும் உள்ளாரோ என்று தெரிந்துகொள்ள இவ்வாறுசெய்வதுவழக்கம். இராயர் அப்பாஜி கதையில் நீர் கேட்டதில்லையா? ஓர் அரசன் இராயரிடத்தில் குடப்பூசனிக்காயும் [illegible]டைக்கீரைப்பாத்தியும் கேட்டனுப்பினதும் அதற்கு அப்பாஜிசெய்த யுக்தி

யும். இதுபோலவே அரசர்கள் திரிகள்முதலான உத்யோகஸ்தர் குள்ளே புத்திசாலிகளைத் தெ கொள்ளவேண்டுமானாலும் அநே களைச் செய்வதுண்டு.

சிவகாமி.—ஆமாம் நீ எனக்கு இவ்வித ஒருகதை சொல்லியிருக்கிறாய் மிருக்கிறது. தாத்தா கேட்கப் பட்டால் சொல்லுகிறேன்.

தாத்தா.—எங்கே சொல்லு கேட்போம்.

சிவ.—சொல்லுகிறேன்கேளும். பாரசீக திலே முன்னொரு காலத்தில் அரசன் தன் சேனைகளுக்கு அதிப நியமிக்கவேண்டிவந்தபோது தன் களின் யுக்திவிசேஷத்தைத் தெ கொள்ளும்பொருட்டு ஒரு உபாய தான். அதாவது பெரியதோர் இர கம்பளத்தைவிரித்து அதன் நடுவில் பொற்றட்டில் இனிய பழவர்க்கங் வைத்துத் தன் உத்தியோகஸ்தர அழைத்து யாவர் இப்பொற்றட்டில்உ பழங்களைக் கம்பளத்தில் காலடிவை மல் கையைநீட்டி எடுக்கின்றார்களோ அவர்க்கே இப்போது காலியாயிருக் "சேனாபதிவேலையைக் கொடுப்ப என்றான். இதைக்கேட்டு உத்யோக ரெல்லாம் ஒன்றுந்தோன்றாமல் விழி நிற்க அவர்கள் எல்லாரினும் குள்ளனா ஒருவன் எழுந்து அரசனைநோக்கி அக்கா யம் நான் செய்வேன் என்றனன். அ கேட்டு மற்றவர்கள் மகாநெட்டையா வர்களெல்லாம் தங்கள் உடம்பை கையையும் தொற்குபோல ஆனமட்டு நீட்டியும் எட்டாதது இக்குள்ளனுக்கே எட்டப்போகிறதென்று நகைக்க, அவ அதை யொன்றையும் பாராட்டாம அரசன் உத்தரவை வேண்டி நின்றனன். அரசனும் அப்படியே ஆகுக என்ன லும் அவன்மெல்ல அக்கம்பளத்தண்டை

ல் உட்கார்ந்து அதனை சாவதானமாகச் நட்டிக்கொண்டுசென்று பழங்களைக் ட்டினதும் கையாலெடுத்து அரசன் ன்னே வைத்தனன். அரசனும் அவன் க்திக்கு மகிழ்ந்து அவ்வேலையை அவ க்குக் கொடுத்தனன். அவனும் அவ் லையில் அரசன் எண்ணியபடியே க்க சாமர்த்தியமாகத் தன் கடைமை ளைப் பார்த்துவந்தனன்.

.—அவன் செய்த யுக்தியும் நன்றாயிருக் . ஆயினும், இச்சொற்ப யுக்திகள் க்குத்தோற்றாதது ஆச்சரியமே.

எதுவும் செய்துகாட்டினபின்பு சொற்ப ாகவே தோன்றும். முதலில் செய்கிற னே புத்திமான். கொலம்பஸ் என்று ஒரு பெரியவர் நூதனமாக அமெரிகா ண்டத்தைக் கண்டுபிடித்தபோது மற்ற ர்களெல்லாம் பொறாமைகொண்டு, இவர் என்ன அவ்வளவு அசாத்திய மான பெரிய காரியத்தைச் செய்துவிட் டார்? இக்காரியம் நம்மில் ஒவ்வொரு வரும் செய்யக்கூடியதே" யென்றனர். அப்போது கொலம்பஸ் அவர்களை ஓரிடத் தில்கூட்டி அவர்களை நோக்கி, "போகி றது, நானிப்போது சொற்பவிஷயம் ஒன்றுசொல்லுகிறேன்; இதை நீர் செய் வீர்களாயின் நீங்கள் கெட்டிக்காரர்கள் தான் ஒப்புக்கொள்ளுகிறேன்" என்று ஒரு கோழிமுட்டையைக்காட்டி அதை விழுந்துவிடாமல் ஒருபுறமாய் நிற்கும்படி நிறுத்த வேண்டினர். அது ஒருவராலும் இயலாமற்போகவே உடனே தாமதை எடுத்து ஒருபக்கத்தை நறுக்கென்று உடைத்து அப்பக்கமாக மேசையின் பேரில் நிறுத்திவைத்தனர். அதுகண்டு மற்றவர்கள் இதுதானா, இது நான் செய்ய மாட்டேனா, நான் செய்யமாட்டேனா?" என்ன, அதற்கவர் "எல்லாம் செய்து காட்டினபின் செய்வீர்கள்தான். இச் சொற்பகாரியங்கூட முதலில் உங்களில் ஒருவருக்கேனும் செய்ய வகை தோற்ற வில்லையே. வேறே பெரிய காரியங்களை நீங்கள் செய்வதெப்படி" என்று அவர் கள் வெட்கித் தலைகுனியும்படி விடை பகர்ந்தனர். ஆதலின், செய்தபின் செய் வது என்ன ஆச்சரியம்? முதல் முதல் செய்பவனே சமர்த்தன். மேலேவாசி சிவகாமி.

---

இரண்டாம்பாதம்.

## நவநந்தனர்வதம்.

---

இவ்வாறு சந்திரகுப்தன் அக்கிரபோஜனத் துக்குப் பிராமணர்களை அழைத்துவரும்வேலை யில் இருந்துவருகையில், ஒருநாள் பிராமணன் வெகு கோபமாக வழியிலிருந்த அறுகங்கட் டையை வேருடன்பறித்து நெருப்பிலிட்டுக் கொளுத்தி அச்சாம்பலை நீரிற்கலக்கி உட் கொண்டதனைக்கண்டு, ஆச்சரியமுற்று அவ் வேதியன் சமீபத்திற்சென்று கைகூப்பித் தொழுது, "ஐய, இவ்வளவு கோபமாக இவ் வறுகங்கட்டையைத் தண்டிக்க அதென்ன அபராதம்செய்தது?" என்ன, "இவ்வறுகங் கட்டை நான் வரும்போது என்காலில்தடுக்கி அதனால் நான் கீழேவிழ நேரிட்டதனால் எனக்குப் பகையாயிற்று. சத்துருக்களைச் சேஷம்வைக்காமல் களையவேண்டுமென்று சாஸ்திரம் இருப்பதனாலே, இதை வேருடன் பிடுங்கிச் சாம்பலாய்ச்சுட்டுக் கரைத்தா லொழிய என் கோபம் நீங்காதாதலின் அவ் வாறுசெய்தேன் என்றனன். அதுகேட்டுச் சந்திரகுப்தன் இப்போது உமக்குப் பகையா னது ஓர் அறுகங்கட்டையாதலினாலே அதனை இவ்வாறு சுட்டுக்குடித்தீர். அரசர்கள்போ லும் வலியுடையோர்கள் உமக்கோர் பிழை இழைப்பாராயின் நீர் என்ன செய்வீர்? உம்மா லவரை எதிர்க்கமுடியுமா?" என்றனன். அப் போது வேதியன், புன்சிரிப்போடும் அவனை

நோக்கி "நீ சிறுவன், உனக்கென்ன தெரியும் என்னுடைய குணங்களும் புத்திவிலாசமும்? அரசர்களுக்கு ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளும், அநேக புத்தியில்வல்ல மந்திரிமார்களும், தெய்வாநுகூலமும் யாவும், ஒருங்கேயிருப்பினும் என்புத்திக்கு முன்னே அவை யாதுபயன்படும்? என் புத்தியினால் வெல்லமுடியாதது உலகில் ஒன்றும் இல்லை" என்றனன். அதுகேட்டுச் சந்திரகுப்தன் மிக்க வணக்கத்தோடு "ஐய, தேவரீர் வரலாற்றை எனக்கு எடுத்துரைக்கவேண்டும்" என்ன, வேதியன் தன் பெயர் சாணக்கியன் என்றும், தனக்கு அப்பெயர் தவிரக் கௌடில்யன், விஷ்ணுகுப்தன் என்றுவேறிரண்டு பெயர்களும் உண்டென்றும், தான் அங்கு அரண்மனையில் அக்ரபோஜனம் செய்யக்கருதி வந்தவனென்றும் தன் விருத்தாந்தங்களையெல்லாம் சவிஸ்தாரமாகச்சொல்லினன். சந்திரகுப்தனும் அவ்வேதியனுக்குத் தன் விருத்தாந்தங்களையும் தனக்கும் அரசருக்குமுள்ள பகையையும் தெரியச்சொல்லி அவனோடு மிக்க அன்பும் உறவும்பாராட்டிக் கூட்டிக்கொண்டுசென்று ஸ்நாநாதிகள் செய்வித்து அரண்மனையில் போஜனசாலையில் கூட்டிக்கொண்டுபோய் விட்டு அவனிடம்விடைபெற்றுக்கொண்டு தன் னிருப்பிடம் சென்றனன். போகும்போது சந்திரகுப்தன் இத்தனைநாள் காத்திருந்ததற்குத் தக்க பலன் கிடைத்தது. இந்தப் பிராமணனுடைய கோபத்துக்கும் அரசர்களின் அகங்காரத்துக்கும் எள்ளளவும் பொருந்தாதாதலின், இவனுக்கும் அரசர்களுக்கும் அவசியம் மற்சரமுண்டாகும். இவனுடைய துணையைக் கொண்டு நான் பிரதிக்கிரியைசெய்து "பகை தீர்த்துக்கொள்ளுவேன்" என்று தனக்குத் தானே சொல்லிச் சந்தோஷித்தனன்.

இங்கு சாணக்கியன் போசன சாலையுட்புகுந்து பார்த்தபோது அங்கு கிழக்கு முகமாக வரிசையாக ஒன்பதுபொற்றளிகைகளும் அவற்றிற் கெதிர்முகமாக ஒரு பொற்றளிகையும், அவைதவிர வேறே ஆயிரம் வெள்ளித்தளிகை

யும் வைத்திருக்கக்கண்டு, பாசகர்களை
"இப்பொற்றளிகைகள் யாவர்க்கு வைக்
டுள்ளன என்று" கேட்டனன். அதற்கு
கர்கள், கிழக்கு முகமாயுள்ள ஒன்பது
களும் அரசர்கள் ஒன்பதின்மருக்கு
அவற்றெதிர்முகமாயுள்ளது அக்ரபோ
துக்கு நியமிக்கப்பட்ட பிராமணனுக்கு
மற்றவை மற்றப் பிராமணர்களுக் கெ
கூறினார்கள். அது கேட்டுச் சாணக்
இன்று இங்குவந்து கூடியிருக்கும் பிரா
களில் என்னிலும் முந்தினவர் யாவருள்
எனக்கே இவ்வக்ரபோசனம் உரியது
சொல்லி அவ்வக்ராசனத்தில் போய் உ
தனன். அரசர்கள் ஒன்பதின்மரும் ஸ்
கள் செய்துகொண்டு போஜனத்துக்கு
சேர்ந்தபோது அங்கு அக்கிராசனத்தில்
திருக்கும்விப்பிரனை நோக்கிக்கோபங்கொ
"இன்னம் மீசைகூட முளையாத இச்
வனோ அக்கிராசனத்தில் அமர்ந்திரு
பெறுபவன். இவனை யாவர் இதன்மே
கச்செய்தது? இந்தத்திருட்டுக்குரங்கை இ
தெறிந்து அடித்து வெளியே தள்ளுதற்கு
வரும் இல்லாமற்போயினரோ? எம் சோற்
யுண்பவர் எல்லாரும் எங்கு சென்றார்கள்
என்று கூறினார்கள். அதுகேட்டுச் சாண
யன், ரௌத்திராகாரமாகக் கோபங்கொ
"நான் குரங்கானாலும் ஆகின்றேன். கள்
ஆனாலும் ஆகின்றேன். இங்கு வந்திருக்
வேதியர்களில் என்னிலும் தெரிந்தவன்
வன் உளனாயின் எழுந்து வருக. நாலுவே
ஆறு சாஸ்திரங்களில் என்னை வந்து பரிக்ஷி
வல்லவர் வந்து பரிக்ஷை செய்க. எனக்
மிஞ்சினவன் ஒருவன் உளனாயின் இவ்வக்
ராசனத்தைவிட்டு எழுந்திருப்பேனே யன்
கர்வபுஞ்சர்களாகிய உங்களுடைய அட்ட
சங்களுக்குப் பயந்து உமது கொடுஞ் செ
களைக்கேட்டு இரங்குவேனோ?" என்றனன்
இவ்வாறு சாணக்கியன் ரோஷம் பொங்க நிய
யம் கேட்டபோது ராஜசேவகர்கள் அவனை
முடிபிடித்துக் கரகர வென்றிழுத்து கொடு

அடித்துதைத்துப் போஜன சாலையி
ம் வெளியே தள்ளி, வயதில் முதிர்ந்த
ரு வேதியனை அக்ராசனத்தில் இருக்
த்தனர்.
ாக்கியனுக்கு அப்போதுண்டாகிய கோ
சத்தை யாவர் கூறவல்லவர்? ஏதுக்கும்
ஓர் அறுகங் கட்டை காலிற் தடுக்கியது
அதனை வேரோடு பிடுங்கி நெருப்பிற்
சாம்பலாக்கி உண்ணீரிற் கலக்கிக்கு
வங்கை தீர்த்துக்கொண்ட மகா ரோஷ
ானவன் இப்போது இவ்வளவு கொடு
ாக அரசர்களால் ஆயிரம் பெயர்கள்
த மகா சபையில் அவமதிப்புண்டது
ப்பானே. ரோஷமா[ன]ய அக்கிஜ்வாலை
தகிக்கப்பட்டு அவன் அப்போது கொடு
ாகிய சிலபிரதிக்ஞைகளைச்செய்துகொண்
ன். ஆ ஆ, மகா அக்ரகண்யனுயுள்ள என்னை
ம் காரணமில்லாமல் இவ்வாறு அக்ரஸ்தா
கொடாமல் அவமதித்து அந்த ஸ்தானத்
வேறொருவனுக்குக்கொடுத்துச் செய்த
கத்துக்கு மாறாக நான் உங்கள் ஒன்பது
ரையும் வெட்டிக்கொன்று ஓர் சூத்திரனை
நாட்டுக்கு அரசனாகச் செய்யாவிடில் இந்த
விழ்ந்துபோன முடியை முடிந்து கொள்
னோ? ஓ க்ஷத்திரியாதமர்களே, அற்ப புத்தி
டைய அறிவில்லாத மூடர்களே இக்காரியம்
குநாட்சென்று செய்வேனென்றும் நீங்கள்
ண்ணவேண்டாம். அதி சீக்கிரத்திற்றானே
ய்து முடிக்கின்றேன் என்று கோரமாகிய
திக்ஞையைச் செய்து போயினான். அப்
ாது அச்சபையின் கண்ணுள்ள ஜனங்க
ளெல்லாம், ஒன்றும் உரையிடாமல் துணுக்குற்
ருந்தனர். அரசர்களோவென்னில் பசித்
ழலால் வெதுப்புண்டு வெறிபிடித்துக் கூறிய
வகுளி மாற்றங்களேயன்றி இவன் என்ன
மைச் செய்யப்போவது, என்று பரஸ்பரம்
சால்லி அவனை இகழ்ந்திருந்தனர். சாணக்
யன் பின்பு சந்திரகுப்தன் கேட்டுக்கொண்ட
வாறே அவன் அகத்துக்குச் சென்று அவனை
நோக்கி, "நண்பனே நீயே யினி இவ்விராஜ்யத்
துக்கு ராஜாவானாய் என்றறிந்துகொள். நானே
உனக்கு மந்திரி" என்றனன். அதுகேட்டுச் சந்
திரகுப்தன் "ஐயா தாங்கள் கூறிய மாற்றங்
கள் ஒன்றும் எனக்குப் புலப்படவில்லையே.
நான் அரசனாவது தாங்கள் மந்திரியாவது இப்
பட்டங்கள் நமக்கு யாவர் தருவது விளங்கச்
சொல்லவேண்டும்" என்ன, சாணக்கியனும்
தன்னை அரசர்கள் அவமதித்ததும் தானதற்
குச்செய்த பிரதிக்ஞையும் ஆக நடந்த விவரங்
கள்யாவும் விளங்கக்கூறினன். சந்திரகுப்தன்
அதுகேட்டு விஷயங்கள்யாவும் தான் கருதியது
போலவே முடிந்தது கண்டு மிக்கவும் மனம
கிழ்ந்து அந்தக்ஷணமே அவ்வந்தணனைத் தனக்
குக் குருவாகக் கொண்டு அவனோடு சக்கியம்
செய்து கொண்டனன். சாணக்கியன் பின்பு
ஆகவேண்டிய காரியங்களில் சிற்சிலவற்றை
நியோகித்துவிட்டு அவனிடம் விடைபெற்
றுக்கொண்டு தன்னிருப்பிடம் போயினன்.
இவ்வாறிவர் இருவரும் செய்துகொண்ட சக்
கியமும் நிறைவேற்ற மேற்கொண்ட காரியங்
களும் ஒருவரும் அறிந்ததில்லை.

தாத்தா.—சாணக்கியனை அரசர்கள் செய்த
அவமதிப்பு பொறுக்கத் தக்கதன்றுதான்.
என்ன எவ்வளவு பிரம்மண்யம் அடங்
கிய ராஜசபை. போஜன காலத்தில் இவ்
விதமாக அவனை இழுத்தடித்து இம்சை
செய்து அவமதித்தது மிக்க அநீதமும்
ஆகும். வயதில் முதிர்ச்சி யில்லாவிடி
னென்ன. பெருமையும் சிறுமையும் வய
சினாலோ மதிக்கத் தக்கவை, "உருவு
கண்டெள்ளாமை வேண்டும் உயர்பெருந்
தேர்க்கு அச்சாணி யன்னா ருடைத்து"
என ஞானசிகாமணியாகிய பொய்யா
மொழியார் புகன்றதில்லையோ. அவன்
கேட்டுக்கொண்டபடி அவனை யாவராயி
னும் நாலு கேள்விகேட்டு மடக்கினாலும்
ஒப்புக்கொள்ளலாம். ஒன்றும் இல்லையே.
கேவலம் பலாத்காரத்தினாற் செய்ததே
யன்றோ ?

ருக்மணி.—ஆமாம் அரசர்கள் செய்தது அக்கிரமமும் அநீதமுமான காரியமே என் பதிற்றடையில்லை. பிராமணர்களுக்கு முன்கோபமும் பின்புத்தியும் என்பார்கள். இங்கு க்ஷத்திரியர்களுக்கே அக்குற்றங்கள் மிகுந்திருந்தன. எறத்தாழ இருந்த போதிலும்கூடச் சாப்பாட்டை ஒட்டிவிட்டுப் பின்பு பார்த்துக்கொள்ளலாமென்றிருக்கவேண்டியது. அப்படிச் செய்யாமல் அவனை அவமதித்துத் தள்ளியது அக்ரமமென்றே யாவரும் ஒப்புவார்கள்.

சிவகாமி.—சாணக்யனுக்குப் பூணல்கூடப் போடவில்லையோ என்னவோ. பூணல்தான் போட்டிருந்தாலும் மீசி முளைக்காத பையனென்று சொல்லி யிருப்பதினாலே அவன் அவ்வளவு அங்கமாக அநேக வயோதிகர்களா யிருப்பவர்களைத் தள்ளி அக்ராசனத்தில் இருந்தது தான் ஒப்பத்தக்கதோ? பிராமணனுக்கிருக்கிற அகந்தை வேறொருவருக் கில்லையே.

தாயார்.—அப்படி யன்று. அரசனிடத்தில் சன்மானத்தைப் பெறவிரும்பி வருபவன் அறிவினால் மதிக்கப்படவேண்டுமேயன்றி வயதாலும் உருவத்தாலும் மதிக்கப்படக்கூடாது. வயதின் பெருமை பெருமையாவது அதனோடு அறிவும் ஒழுக்கமும் இருந்த காலத்தேயாகும். அல்லாவிடில் பெருமையாக மாட்டாது. அன்றியும் ராஜ சன்மானத்தைப் பெறவிரும்புகிறவன் வபதிற்கஞ்சிப் பின் வாங்கினால் அவன் கோரிவந்த சன்மானம் எவ்வாறு அவனுக்கு லபிக்கும்? எவ்வாறு அவனுக்கு அறிவும் வித்தையும் பயன்படும். எவ்வாறு அவன் பெருமை அடைவது? அக்ராசனம் வயதின் முதிர்ந்த தாத்தாவுக்கு என்று ஏற்படாதென்றே எண்ணுகிறேன். வித்வத்துடையவர்கள் அதனைப் பெறவிருப்புவது: அவர்களுக்கு அது நியாயமே.

தாத்தா.—போகிற காலத்துக்குத்தான் பி வேஷம். இவர்களுக்குப் போராத ச குறுகியதினாலே புத்திகெட்டுப் ற்று.

சுப்பு.—சாணக்கியன் அவ்வளவுகோரமா தம் பண்ணினானே. முடிக்க வ யுண்டா?

தாத்தா.—நீ பாரதத்திலே கேட்டதில் துரோணாசாரி செய்த பிரதிக்கினை?

ருக்மணி.—பாரதம்தான் பிரதிக்ஞைக் க சியம் ஆயிற்றே. அதில் பிரதிக்ஞை யாதவர் யாவர்? பஞ்சபாண்டவர் துரோபதி கிருஷ்ணன் பாஞ்சாலன் ரன் பீஷ்மன் முதலான ஒவ்வொருவ கோரமான பிரதிக்ஞைகளைச் திருக்கிறார்கள். துரோணாசாரியின் திக்கினையும் பெரிய பிரதிக்கினை அவன் அதை சாதித்துக்கொண்டது ஆச்சரியமே.

சிவகாமி.—அம்மா அந்த துரோணாசாரியி பிரதிக்ஞையை எடுத்துச் சொல்லவேண்டும். பாரதகதைகள் கேட்கக் கேட்க அலுக்கிறதில்லை. தாத்தா நான் உமக்கு அரசன் செய்த தந்திரத்தைப்பற்றி ஒரு பார்சிக்கதை சொன்னேனே. நீரிப் போது இந்தத் துரோணாசாரியின் கதையைச் சொல்லக் கூடாதா?

தாத்தா.—கூடாமல் என்ன சொல்லுகின்றேன் கேள். துரோணாசாரியாரென்பவர் பரத்துவாஜ மஹா ரிஷிக்கு துரோணகும்பத்தில் அற்புதமாகப் பிறந்த புத்திரர். பரசுராமருக்குச் சிஷ்யர். பாண்டவர்களுக்கும் துரியோதனாதிபர்க்கும் படைக்கலங்களும் ஆனையேற்றம் குதிரை யேற்றங்களும் கற்பித்த வில்லாசிரியர். இவர் பால்யத்தில் யாகசேனனென்னும் ஒரு ராஜ குமாரனோடு கல்வி கற்றுக்கொண்டிருந்தார். அப்போது அந்த யாகசே

ன் தான் ராஜ்யத்தைப் பெறப்போகும் காலத்தில் அவருக்கு ராஜ்யத்தில் பாதி ாதோ காரணமாகப் பகிர்ந்து கொடுப்ப ாகச் சொல்லியிருந்தான். ஆயினும் அதைக்கொடாமல் மறுத்துவிட ர்கோபித்துஎனக்குரியபாதியை தில் நான் வாங்காமல் போனல் ன் ஆவேனே என்று சொல்லிக் ்கே த்துப் போய்விட்டனர். பின்பு திருதராஷ்டிரன் சபையை அடைந்து அவ்வரசன் புத்திரர்களுக்குக் குருவாக அமைந்து அவர்கள் அனைவரும் ஒருவர்க் வர் தோல்வியில்லை யென்னும்படி அஸ்திர சஸ்திரவித்தைகளில் மகா வல்லவர் ஆனார்கள். ஆயினும் அவர்கள் எல்லோரிலும் அவருக்கு அதிப்பிரியமான சிஷ்யன் அருச்சுனன். கற்பித்த விஷயங்களைக் கருத்தாகப் படிப்பவர்களைக் கண்டால் எவர்க்கும் சந்தோஷமும் பிரீதியுமுண்டாகு மல்லவா? அன்றியும் ஒரு நாள் துரோணசாரியாரை முதலை பிடித்துக்கொண்டது கேட்டபோது துரியோதனன் முதலானோர்கள் வெறுங் கையோடு வேடிக்கை பார்ப்பவர்போலப் போக அருச்சுனன் வில்லும் அம்புமாக விரைந்தோடி அந்தமுதலையைக்கொன்று குருவின் பிராணனைக் காப்பாற்றினன். அதனல் அவருக்கு அருச்சுனனிடத்தில் முன்னிலும் பன் மடங்கு பிரீதி யுண்டாயிற்று.

சீடர்களெல்லாம் கற்கவேண்டும் விஷயங்களெல்லாம் செவ்வையாகக் கற்றுக்கொண்ட துரோணசாரியார் அவர்களோடு தான் செய்துவந்த பிரதிக்ஞையைச்சொல்லி அப்பிரதிக்ஞையை நிறைவேற்றவேண்டும். அதுதான் நீவிர்கள் அவருக்குக்கொடுக்கும் குருதக்ஷிணை யென்று வேண்டிக்கொண்டனர். பாண்டவர்களும் கௌரவர்களும் யாகசேனன்மேல் படையெடுத்துச் சென்றாராயினும் துரியோதனன் அவ்வியாசகனோடு போர் செய்யவாற்றாமல் மீண்டுவிட்டான். அருச்சுனன் பராக்கிரமமாகப் போர் செய்து யாகசேனனைச் செயித்து அவனைத் தேரில் கட்டி துரோணாசாரியார் முன் கொண்டுவந்துவிட்டு அவருடைய பிரதிக்ஞையை நிறைவேற்றி அவரை அகமகிழ்வித்தான். துரோணாசாரியார் தமக்குரிய பாதி ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு மறுபாதி யாகசேனனுக்கே கொடுத்தனுப்பி விட்டார்.

சிவகாமி.—பலே துரோணசாரியார்! வெகு சாகசக்காரரா யிருக்கிறாரே. இந்தச் சாணக்கியனும் அவருக்குச் சாகசத்தில் குறையமாட்டானென்றே தோன்றுகிறது.

தாயார்.—சாகசம் இல்லாதவர்களுக்குப் பிரதிக்ஞைகள் எவ்வாறு நிறைவேறும். காரியங்கள் எப்படி சாதிக்கும். நபோலியன் என்றொரு யுத்த வீரன் தன்னுடைய சௌரிய சாமர்த்தியத்தினலே ஐரோப்பாகண்டம் முழுதும் நடுங்கும்படிச்செய்தவன். இவன் ஒருகாலத்தில் இத்தாலி தேசத்துக்குப்படையெடுக்கவந்தபோது வழியில் மலைகள் குறுக்கிட்டிருப்பதினல் சேனைகள் செல்லுதற்கு மார்க்கமில்லை யென்று சேனபதிகள் சொல்ல ஆயின் நம்வழிக்குத் தடையாக அம்மலை அங்கு இருக்கத் தேவையில்லை. அதனை அகற்றுங்கள் என்றனன். இதன்பயனக அம்மலையூடே, அதனைக்கடந்து செல்லும்படி ஒருமார்க்கம் அமைக்கப்பட்டது; அதுவே சாகசம்: பிடித்த காரியத்தைப் பின் வாங்காமல் நிறைவேற்றுவதே சாகசம். அக்காரியம் எவ்வளவுக் கெவ்வளவு அருமையானதோ அவ்வளவுக் கவ்வளவு சாகசமும்பெரிதாகும். சாணக்கியன் சாகசமும் தந்திரமும் பின்னல் தெரியும். இப்போது கதையை இத்துடன் நிறுத்துவோம்.

எஸ். மீத்து ஐயர், பி. எ.

## CONSOLATION.*

### To a Friend on the Death of his Wife.

### பார்யாவியோகத்தினால் வருந்திய ஒரு நண்பர்க்குச் சொல்லிய உபசாரம்.

---

1. முன்னரோர்பகல், ஒருவர்க்குத் தீக்கடன் முடிக்கத்
துன்னு போழ்தவண், குரவனார் சொற்றசொற்கேட்டு
மன்னவும் வியப்படைந்தனன் ;—"மகிழ்தும்யாம்" என்றலாற் ;
பின்னரோர்ந்தனன் மற்றதன் பெற்றியைப்பெரிதே.

2. "அன்பர், வம்மினாமகிழ்தும் ! அழற்றுறுமரணம்
துன்புசெய்திறலழிந்ததாற் ; றுலங்கநாம் நேசித்
தின்புகூர்ந்தவர்க்கினியொரு துயரமும் கவலும்
வன்புமில்லையால் ; ஒழிந்தனர் மண்விடுத்தன்றே.

3. "என்றும் நீங்கலா வமைதியும், இன்பமும், அன்பும்,
நன்று வாய்ந்தனர் ; குறையிலைகவில்வதொன்றவர்க்கே ;
துன்றிருள் செறிசமாதியும் அவர்கொளும் துகளில்
வென்றியான்மிகமிளிர்ந்தது ! விந்தையென்சொல்வேன் !"

4. இனையவாற்றினக் குரவனார் எழிலொடுமியைந்த
விநயமோடுமாங் குரைத்தலும், விண்ணினின் றிழிந்து
கனியவந்தெனும் அமைதியொன்றெங்கள்பாற்கடுகி,
துனிகொணெஞ்சிடைத்துயரெலாம்துடைத்ததையன்றே.

5. அன்னகாலையினவ்விடத்தடைந்த வாறுதலைப்
பின்னர் பற்பல பொழுதினும் பிழையறப்பேணி
முன்னி யுள்ளனால் ; இன்று மென் முழுவலன்புடையாய்,
உன்னுவேனதை யுன்பொருட்டின்னமோர் காலே.

---

*CONSOLATION.

To a Friend on the Death of his Wife.

Once at a funeral I heard, surprised,
The Minister, in tender, reverent tones
Which touched all hearts, say : Friends, let us rejoice !
Let us rejoice that death has lost its sting !
That one beloved is freed from care and pain,
Hath gained eternal peace, and joy, and love,
That e'en the grave is bright with victory !
And then a breath of that celestial peace
Seemed to descend and touch the audience
With an ineffable and holy calm.
Over and o'er again I have recalled
The consolation of that place and hour,

6. உண்மை; நீயுனக்குரியவர்யாரினும்உயர்ந்த
திண்மைசேர்தரும்அன்புடைச்செயிரில்காதலியாம்
பெண்மையிற்கனி பேதையையிழந்தனை; யெனினும்
எண்மையாலவட்கெய்தியதுயர்பெரும்பேறே.

7. இன்னலும், மனத்துயரமும், எய்ப்பொடுபனிப்பும்,
சொன்னயாவையும், கடந்தனள்; தூயவன் பதத்தை
மன்னியாங்கவன் அருள்தலைக்கொண்டிவண்மருவும்
பன்னரும்தமர்க்குறுபயன்பயந்திடப்பெற்றாள்.

8. மற்றிவாசகம்வழிதிபான்புகன்றதென்றுன்னல்,
சொற்றதுள்ளதாற்றொல்பெருமறையினுமாங்கே;
பெற்றதோகைநின்மனத்துளும்உணர்வுளும்பிறங்க
உற்றுரைப்பளாலுனக்குமோருறுதியாமொழியே.

9. தானடைந்ததோர்தகைமலிபெருமையும்,திருவும்,
வானடைந்தபேரின்பமும், மற்றுநீதானும்,
ஊனடைந்தவிவ்வாழ்க்கையின்உறைகினும், காணத்
தேனடைந்த தார்க்குழலவள் செப்புவளுனக்கே.

10. அங்கு நீவரும் வரவினைக்காணுமா அன்பால்
மங்கை முன்னெதிர்நோக்கினள் வைகுவள்; மற்றுத்
தங்கும் நாள் அவளின்மையாலிருளுறா; தயங்கத்
துங்கவானிருந்துவகையினோக்கலாற்றுலங்கும்.

11. ஆதலாலினித்தளர்வெலாமொழிகுதி; அணைந்து
போதுமிப்பகல் நிசியிருள்போலினும், நாளைப்
பேதுறல்தவிர்த்திடுமொருபெற்றிசேர்வானத்
தீதிலாவொளிநிறைதரத்திகழ்ந்திடுமன்றே.

S. M.

---

As I do now for thee, though thou hast lost
Thy best beloved of those most near and dear.
For she at last has triumphed over pain,
And grief, and weariness, and suffering,
And hath become, for so the Scriptures teach,
One of God's ministers to those who still
Have duties to perform which keep them here.
Still softly speaking to thy thought and heart,
She bids thee lift thine eyes and see the glow
Of the eternal life upon the hills.
She waits thee there, and thy remaining days
Shall not be darker for her absence here,
But brighter for her smile from paradise.

Be thus consoled, and though to-day be dark,
To-morrow will be filled with heavenly light.

CHARLES C. BONNEY.

—*The Open Court.*

## On the English Language.
## இங்கிலீஷ் பாஷாமகிமை.

தத்தம் பாஷையை வியந்து பூஷித்துக் கொள்ளுதல் ஒவ்வொருவருக்கும் இயற்கையாயினும், இங்கிலீஷ்பாஷையைப்பற்றி அடியிற் கூறிய விஷயங்கள் அநேகமாக ஒப்புக்கொள்ளத்தக்கவைகளே. மெக்காலே (Lord Macaulay) என்னும் அங்கிலேய பண்டிதர் ஒருவர் இப்பாஷையைக் குறித்துப் பின்வருமாறு கூறுகின்றனர்.

இப்பாஷை ஐரோப்பிய பாஷைகளுக்கெல்லாம் முதன்மையாக நிற்கின்றது. இது பூர்வீக கிரேக்கரிடத்திருந்து நாம் பெற்றிருக்கும் அதிசிரேஷ்டமான நூல்களுக்கும் பின்வாங்காத அநேக கற்பித காவியங்களால் நிரப்பியுள்ளது. எவ்வகையான வாக்சாலங்களுக்கும் முதற்றரமாகக் கொள்ளக்கூடிய வாக்சாலங்களும் எவ்வளவோ இதில் இருக்கின்றன. சரித்திர நூல்களுக்கோ அளவில்லை. இச்சரித்திர நூல்களைப்போல அவ்வளவு இனிமையாகவும் தெளிவாகவும் விரிவாகவும் கதைகளை எடுத்துச்சொல்லும் நூல்கள் வேறெந்தப் பாஷையிலும் இவற்றிற் சிறந்தவை இல்லை. அன்றி, இவைகள் நமக்குப் போதிக்கும் ராஜதர்மங்களையும் துரைத்தன ஒழுங்குகளையும் ஆலோசிக்கின் இவற்றிற்குச் சமானமானவை கூட வேறெந்தப்பாஷையிலும் இல்லையென்றுசொல்லத்தக்கது. இவையன்றி மனுஷ்ய ஸ்வபாவங்களையும் உலகவாழ்க்கையையும் உள்ளதை உள்ளதுபோல எடுத்துக்காட்டி உவப்பிக்கும் நாடக நூல்களும், வேதாந்தம், நீதி, துரைத்தனம், நியாயம், வர்த்தகமுதலியவற்றைத் தீரவிசாரித்துச் சிறந்த கொள்கைகளைச் செவ்விதிற்றெரிவிக்கும் பற்பல நூல்களும், இன்னம் நமது செல்வத்தைப் பேணிச் சுகங்களை விருத்திபண்ணி, புத்தியை விகசிக்கச்செய்தற்குரிய பொருள்களின் குணாகுணங்களையும் சத்திகளையும் பிரத்தியக்ஷமாகப் பரிசோதித் தறியும் ஒவ்வொரு நூதன சாஸ்திர சம்பந்தமாகவும் உண்மையான விஷயங்களைப் பூர்ணமாகப்பே
கும் அநேக நூல்களும் கணக்கில்லாமல்
பாஷையில் இருக்கின்றன.

எவர்கள் இந்த பாஷையைக் கற்றிரு
ருர்களோ அவர்களுக்கு எத்தேயத்திலு
தப்பாஷையிலும் புத்தியில் வல்லவர்க
மகான்களால் நூறுதலைமுறையாக வ
தேடிச் சேர்த்து வைக்கப்பட்ட அருமை
வித்வத் பொக்கிஷமனைத்தையும் பெற்
களித்தல்கூடும். இன்றைத்தேதியில்
பாஷையில் உள்ள நூல்கள் முந்நூறு வ
களுக்குமுன்னே உலகில் இருந்த ச
பாஷைகளின் நூல்கள் அனைத்தினும் மி
உபயோகமானவை யென்றும், விலைமதி
தக்கவை யென்றும், நிச்சந்தேகமாகச்செ
லாம்.

அன்றியும் இந்துதேசத்தார்களுக்கு இ
ஷை இன்னொருகாரணத்தாலும் மிகவும் வி
பிக் கற்கத்தக்கது. இங்கு இது துரைத்த
தாரால் பேசப்பட்ட பாஷை. அன்றி நகரங்
தோறும் சுதேசிகளில் உயர்ந்தோர்களா
பேசப்படுவது. இது ஆசியாகண்டமுழு
வர்த்தக நடவடிக்கைகளில் உபயோகப்ப
தும் பாஷையாக ஏற்படக்கூடியது. இ
தென்னாப்பிரிகாவிலும் ஔஸ்திரேலியாவிலு
ஓங்கிப்பெருகுகின்ற இரண்டு ஐரோப்
ஜனங்களுக்குரிய பாஷையும் ஆகும். இ
ரண்டு ஜனங்களுக்கும் இந்தியா தேசத்தா
கும் நாளுக்கு நாள் வர்த்தகமுதலான சம்
தங்கள் நெருங்கிக்கொண்டு வருகின்றன. ஆ
லால் இப்பாஷை இத்தேசத்தாருக்குப் ப
காரணங்களாலும் அத்தியாவசியமானது.

## The Wit and Humour of Poets.
## கவிகளின் விசித்திரவிற்பன சமத்காரங்கள்.

செந்தமிழ்ப் புலவர்கள் செல்வவான்களை
யடுத்து அவர்க்கு மகிழ்ச்சியும் பிரீதியுமுண்ட

ப் பாடிய பாடல்களில், எவ்வளவோ
மயான கற்பனைகளை வைத்துக் கேட்ப
ங்கு ஆனந்தம் உண்டாகும்படிப் பாடி
றனர். இப்பாடல்கள் தனிப்பாடற்
ன்னு" நூலில் ஆங்காங்கு சிதறுண்டி
பற்றை ங்கு திரட்டிக் காட்டுகின்ற
டிப்ப னியபாடல்களைப் பெற்ற
ளில் வாணனென்பவன் ஒருவன்.
தென்தேசத்தில் வசித்திருந்த ஓர்
ளாப் பிரபுவென்றும், ஆயிரம் ஏர்
விவசாயம் செய்து வெகுதிரவியம்
த்துச் சீமானாய் வாழ்ந்திருந்தானென்
இவன் கம்பர்காலத்துப் பிரபுவென்று
வேறேவிசேஷமாய் இவனைப்பற்றித்
யாது. ஆயினும் இவன் நல்ல தியாகி
தும் தமிழ்ப்புலவரை ஆதரித்து வந்தா
துதும் இவன்மீது பாடியகவிகள் சிலவற்
தெரியவருகின்றன. எவ்வளவு செல்வ
னும் தியாகமில்லாவிடில் அவனை வித்
கள் தேடியடைந்து துதிக்கமாட்டார்
உலோபியென்றே வெறுத்திகழுவார்கள்.
மேல் கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பர்
தாகக் கூறப்பட்டுள்ள ஒருபாடலுண்டு.
ஆ! ஆஹா எவ்வளவு சமத்காரமானது!
டோர்களெல்லாரும் ஆனந்தித்துச் சிரக்
ம் பண்ணும்படியான தென்பதிற் சந்
இல்லை. பாடலும் வெகுலளிதமாயிருக்
. பிரபுக்கள் சாதாரணமாய், அதிலும்
ளில், விசேஷமான பாண்டித்யம் இல்லா
களாய் இருத்தலினால் அவரைச் சிறப்பித்
பாடும் பாடல்கள் மிகச்சுலபமாகப்
ருள்படக்கூடியதாயிருத்தலே விசேஷம்.
போது தான் அப்பிரபுக்கள் அதன்பொரு
சுவையும் அருமையும் பெருமையும்
யறிந்து சந்தோஷித்தற் கேதுவாகும்.
பற்றி மிகச்சுலபமாகப் பாடியிருக்கின்ற

"சேற்றுக் கமலவயற் றென்னாறை வாணனை
யான்
சோற்றுக் கரிசிதரச்சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்
பொன்
அளிக்குமா றெவ்வா றவன்."

"சேறு நிரம்பிய நெல்வயல்களில் கதிர்களுக்கிடையே தாமரை மலர்கள் பூக்கப்பெற்ற நீர்வளமும் நிலவளமும் பொருந்திய அழகிய ஆறை யென்னும் பதியில் வசிப்போனாகிய வாணனென்பவனை யானடுத்து என்குறைகளைச்சொல்லி என் உணவுக்கு உபகரிக்கும்படி அரிசியை யாசித்தக்கால் அவன் அதைவிட்டு களிக்கு மாவைத் தந்தான் (அதாவது களி கிண்டித்தின்றற்குரிய மாவைக் கொடுத்தான் என்றும் இன்னம் மதகளிப்பையுடைய யானையைப்பரிசாகக்கொடுத்தான் என்றும் பொருள் தரும்.) இவன் கற்றறிந்த புலவர்களுக்குக் கொடுக்கும்விதம் எவ்வளவு நேர்த்தியானது!" என்று வசையாகச் சொல்லுதல் போலத் தோன்றும் பெருமிதப்புகழ்ச்சியைச் செய்தனர். சோற்றினும் களிதாழ்ந்ததாகும். சூழ் தாழ்ந்திருத்தல்போல் அவ்வளவு தாழ்வில்லாததாயினும் தாழ்வென்றே சொல்லத்தக்கது. இது இன்னம், எனக்கே, அதாவது ஒன்றும் கற்றறியாதவனாகிய அற்பவித்துவானுக்கே இவ்வளவு சிறப்புச் செய்தானாயின் மற்றவர்களுக்குக் கேட்பானேன்? என்றும், அன்றியும் எவ்வளவோ கரையில்லாமல் கற்றறிந்து பேர்பெற்றவனாகிய எனக்கே இந்தச் சொற்ப வுதவியைச் செய்தானென்னில் சாமான்யராகிய பண்டிதர்களுக்கு என்னபரிசு கொடுக்கப்போகின்றான் என்றும் கொடானென்றும் துதிக்கும் வசைக்கும் ஏற்றபடி பொருள் தருதலும் காண்க.

இவன்மீது பாடியுள்ள இன்னோரினிய பாடலும் கம்பர் பாடியதே யென்பர். அப்பாடல் பொருளிலும் தொனியிலும் மேற்கூறிய பாடல் போன்று அதனிலும் சமத்காரமாயுள்ளது. ஆதலின் இவ்விரண்டும் ஒரே சமயத்திற் பாடியதென்றே கொள்ளல்வேண்டும். அன்றியும் அரசரால் ஆதரிக்கப்பெற்ற மகாவித்வா

ணுகிய கம்பர் வாணனிடத்தில் இருகாற்சென்று பொருளுதவி வேண்டித் துதித்திராரென்றும் கொள்ளத்தக்கது. அப்பாடல் வருமாறு :—

2. "உலைக்குரிய பண்ட முவந்திரக்கச் சென்றால்
கொலைக்குரியவேழங் கொடுத்தான்-றலைக்குரிய
வாணர்கோன் ஆறை மகதேவ னுக்கிந்தப்
பாணனே டென்ன பகை."

உலையிலிட்டுச் சமைத்தற்குரிய அற்பப்பண்டமாகிய அரிசியையாசித்துச் சென்றக்கால் இவ்வாணனென்னும் பிரபு அதற்கிணங்காது கொலைசெய்யும் கொடுமைக் குணத்தையுடைய யானையொன்றைக் கொடுத்தானே! மகாதேவவாணர் என்னும் பெயருடைய இப்பிரபுவுக்கு நான்செய்த பிழை இன்னதென்றறிகிலேனே. நானோ ஏழைப்புலவன்; ஒருபாவமும் அறியேனே என்றபடி. பகையில்லாமல் இருக்கப் பகையுடைமை தோன்றும்படிக் "கொலைக்குரிய" என்று அடைமொழி கொடுத்துப்பாடினர். இவ்வக்கிரமம் அடுக்குமா? என்று அவரை நிந்தித்ததுபோலத் தோன்றுதல் காண்க. முன்பாடலில் வாணனது உலோபத்தனத்துக்கு மாறாக அவன் வள்ளன்மை விளங்கும்படி பாடினர். இப்பாடலின் அவன் கொடுமைக்குமாறாக நன்மையை விளக்கியது காண்க.

இன்னொருபாடல் இதுபோலவே பொருளுடையதாய் தானன் என்னும் ஓர் பிரபுவின் மீது கவிவீரராகவர் என்னும் ஒரு புலவரால் பாடப்பட்டுள்ளது. இப்பிரபுவின் விருத்தாந்தமாவது இந்தப்புலவரின் விருத்தாந்தமாவது நமக்கு விசேஷமாய்த் தெரியாது. ஒன்றிரண்டு பாடல்களால் மட்டும் இவர்களுடைய விவரம் நமக்குத்தெரியும்படி யிருத்தல் எவ்வளவு பரிதாபம்! இவரது சரித்திரத்தைப் பாவலர் சரித்திரதீபகம் என்னும் நூலில் காணலாகுமென்று நோக்கியபோது அந்நூலாசிரியர், "முத்தமிழ் என்னும் விசேடத்தாற் குறிக்கப்பட்ட இம்முதலியார் பெரும்புலவர் எனல் சத்தியமாயினும் இவர் சரித்திரம் எமது கையில் அகப்படவில்லை" யென்று இவரது ஊர்ப்பெய

ரும் கூடச்சொல்லாமல் விட்டுவிட்டது மிகவும் வருந்துகின்றனம். இவர் பாடிய ப வருமாறு :—

3. இல்லெனும்சொல் லறியாத சீகையில்
னனைப்போய்ப் பாண னிட
பல்லைவிரித் திரந்தக்கால் வெண்சோறு
தூசும் பால
கொல்லநினைந் தேதனது நால்வாயை
சென்று கொடுத்தான் பார
தொல்லையென தொருவாய்க்கும் நால்வ
மிரையெங்கே தூப்பு வே

"தேஹியென்றவர்களுக்கு நாஸ்தியெ சொல்லியறியாத சீகை நகரில் வாழ் தானனென்னும் பிரபுவைப்போய் அடு புலவனாகிய நான் பல்லைத்திறந்து கெஞ்சி தக்கால் அவன் அதற்கிணங்க வெறுஞ் றும் பழந்துணியும் கொடுத்து ஓடிப்போ னுமல், என்னைக்கொல்லக் கருதினவன் தன்னுடைய நால்வாயைப் பரிசாகக்கொ தானே; என்னொருவாய்க்கே நான் உண வருந்த என் ஒரு வாயோடு இந்த நால்வா கும் எங்கிருந்து பேரிரையைத்தேடிக் கொ பேன்" என்றபடி. நால்வாய் என்பதை ந குவாயென்றும், தொங்குகின்ற வாயையுடை யானை யென்றும் பொருள்படச் சிலேடை கக்கூறியது காண்க. தேக சம்பந்தம் அ யாகவிருத்தலின் எப்போது தேகமுண் அப்போதே வாயும் வயிறும் உண்டாத தொல்லைவாய் என்றார். அன்றியும் இ வாய்க்கு,

"ஒருநா ளுணவையொழி யென்றா லொழியாய்
இருநாளைக் கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோ வறிபா யிடும்பைகூ ரென்வயிறே
உன்னோடு வாழ்த லரிது."

என்று ஔவையார் கூறியிருக்கின்றபடி நா தோறும் உணவு தேடியளிப்பது மிகத்தொ ரவாயிருத்தலாலும், "தொல்லை" யென் என்னினும்ஆம். "வெண்சோறு"—கறிகுழ பருப்பு நெய்யோடு கலந்திடும் அறுசுவையு டியை விலக்கி, ஒன்றுமில்லாத சோறுமாத்

அல்லது பழஞ்சோறு மாத்திரமே று பொருள்படக்கூறினர். "இவர் என் கொல்ல நினைத்தார்போலும்; ஆயினும் ங்கு நான்செய்த குற்றம் ஒன்றையும் ணனே நானே பாடிப்பிழைக்கும் . இப்படி விபரீதமாகச்செய்தல் இவரது ர்வம்தானே?" என்று பொருள்படக் னர்.

ப்பாடல் ஒருவேளை அந்தக் கவிவீரராகவ லியார் என்னும் இன்னொருவர் பாடியதாயி ஆகும். ஆயினும், அவரைப்பற்றியும் விவ சரித்திரம் இல்லை. பாவலர் சரித்திர த்தில் இவரைப்பற்றிச் சொல்லிய விவ பின்வருமாறு. "இவர் பிறவிக்குருடரா ந்தும் தெய்வவரப்பிரசாதத்தினால் புகழ் ற கவிவாணராயினர் என்று கதையுளதா ம் இவரது ஜனன தேச மரண காலங்க தியவற்றைக் குறித்து ஓர் சத்திய சரித்தி தையும் கேட்டிலம். இவர் பாடினரென்று ங்கிவரும்கழுக்குன்றப்புராணம் கழுக்குன்ற லையென்னும் இருபாடல்களையும் நோக் வார் இவரது வித்தியா சாமர்த்தியத்தைப் கழ்ந்து பாராட்டப் பின்னில்லார்." கழுக் ன்றமாலையிலிருந்து ஒரு பாடல் திருஷ்டாந்த க வருமாறு:—

"மாடேறு தாளும் மதியேறு சென்னியும் மாமறை
யோன்
டேறு கையும் உடையார் தமக்கிட மூருழவர்
டேறு சங்கம் சொரிமுத்தை முட்டையென் றேக
மலக்
ாடேறு மன்னம் சிறகா லணைக்கும் கழுக்குன்றமே."

இப்புலவரே, இராமன் என்னும் இன்னொரு பிரபுவைப் புகழ்ந்து பாடியபோது,

4. "இம்பர்வா னெல்லை யிராமனையே பாடி
என்கொணர்ந்தாய் பாணநீ யென்றாள்பாணி
வம்பதாம் களபமென்றேன் பூச மென்றாள்
மாதங்கம் என்றேன்யாம் வாழ்ந்தே மென்
றாள்
பம்புசீர் வேழமென்றேன் தின்னு மென்றாள்
பகடென்றேனு ழுமென்றாள் பழனந்தன்னைக்
கம்பமா வென்றேனற்களியா மென்றாள்
கைம்மா வென்றேன் சும்மா கலங்கினளே."

இவ்வுலகத்தேயன்றி வானுலகத்தளவும் புக ழோங்கிய பெருமையையுடைய இராமனென் னும் பிரபுவைப்பாடி என்ன பரிசைப்பெற்றா யென்று என்னை என் மனையாள் கேட்க, நான், அதற்கு மறுமொழியாக, மதவாசனையை யுடைய யானை யென்னும் பொருளில் "வம்ப தாம்களபம்" என்றேன். அதற்கவள் வாசனை யுடைய கலவைச்சந்தனம் என்று பொருள் கொண்டு "பூசிக்கொள்ளும்" என்றாள். பின்பு "மாதங்கம்" என்றுரைக்க அதனாலும் அறியா மல் பொருள்மாறுபடக்கொண்டு "ஆனால் நமது வறுமை நீங்கியது சுகமாகவாழலாயி னோம்" என்றாள். பின்பு "வேழம்" என் றுரைக்க அதைக் கரும்பென்னும்பொருளில் கொண்டு "தின்னும்" என்றாள். பின்பு பொருள் விளங்கும்படி "பகடு" என்றுரைக்க, "ஆனால் ஏரில்கட்டி உழ வுதவியாகும்" என்றனள். பின்பு "கம்பமா" என்றுசொல்ல, "ஆனால் நல்ல களி கிண்டுதற்குதவும்" என்ற னள். பின்பு, கடைசியாகக் "கைம்மா" என்று சொல்ல "கையாவது மாவாவது ஒன் றும் விளங்கவில்லையே" யென்று பொருள் அறியமாட்டாமல் கலங்கினள்"—என்னும் பொருளில் வேடிக்கையாகப் பாடியிருக் கின்றனர்.

இக்கவிவீரராகவமுதலியார் தாமே பின்னும் சீட்டுக்கவியாக வேடிக்கையாக ஒருகவி பாடி யிருக்கின்றனர். அது பின்வருமாறு:—

5. "ஏடாயிரங்கோடி எழுதாமதன் மனத்
தெழுதிப்படித்தவிரகன்
இமசேது பரியந்தம் எதிரிலாக்கவிவீர
ராகவன் விடுக்குமோலை.
சேடாதிபன் சிரமசைத்திடும்புகழ்பெற்ற
திரிபதகை குலசேகரன்
தென்பாலை சேலம்புரந்து தாகந்தீர்த்த
செழியனெதிர்கொண்டு காண்க.
பாடாத கந்தருவம் எறியாத கந்துகம்
பற்றிக்கொலாதகோணம்

பறவாத கொக்க னற்பண்ணுத கோடைவெம்
படையிற்ருெடாத குந்தம்
சூடாதபாடலம் பூவாதமாவொடு
தொடுத்துமுடியாத சடிலம்
சொன்னசொற்சொல்லாத கிள்ளையொன்றெங்கும்,
துதிக்கவரவிடில் வேண்டுமே."

மேற்பாடலில், அநேக கோடி எடுகள் அடங்கிய புத்தகங்களை ஓலையில் எழுதிப்படிக்காமல் மனமாகிய எட்டில் எழுதிப்படித்த புத்திமான் என்று தமக்குக் கண்தெரியாதுபிறவிக்குருடாயிருந்த உண்மையைக் குறிப்பித்தனர். "தம்மைப் புகழ்வதும் தகும்புலவோர்க்கே" என்றிருத்தலின் இமஸ்லேஸதுபரியந்தம் தமக்கோரெதிரில்லாக் கவிஞன் என்று சிறப்பித்துக் கொண்டனர். சீட்டுக்கவிபாடுங் காலத்தில் இவ்வாறு சொல்லிப் புகழ்ந்துகொள்ளுதல் புலவர்க்கு வழக்கமென்பதுக் காளமேகப்புலவர் திருமலைராயனுக்கு எழுதிய சீட்டுக்கவியானும் தெரியவரும். அப்பாடல்வருமாறு:—

"தூதைந்து நாழிகையிலாறு நாழிகைதனிற்
சொற்சந்தமாலை சொல்லத்
துகளிலா அந்தாதி எழுநாழிகைதனிற்
ருெகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செய்மடல்கோவை பத்துநாழிகைதனிற்
பாணியொரு நாண்முழுதுமே
பாரகாவியமெலாம் ஓரிருதினத்திலே
பகரக் கொடிக்கட்டினேன்
சீதஞ்செயும் திங்கள்மரபினன் நீடுபுகழ்
செய்ய திருமலைராயன்முன்
சீறுமாருகவே தாறுமாறுகள்சொல்
திருட்டுக் கவிப்புலவரைக்
காதங்கறுத்துச் செறுப்பிட்டடித்துக்
கதுப்பிற்புடைத்து வெற்றிக்
கல்லணையினெடு கொடிய கடிவாடமிட்டேறு
கவிகாளமேகம் நானே."

ஆதிசேடன் சிரமசைத்தல் அவன் அறிவிற்சிறந்தவனுதலின் மிகவிசேஷம் என்பது தோன்றக்கூறினர். ஆதிசேடன் அறிவிற்சிறந்தவனென்பது "தெருளின் மாக்களிற் சேடனிற்ருழ்குநரில்லை" யென்னும் நைடதக் கற்பனையானும் பெறப்படும்.

'திரிபதகை குலசேகரன்' என்றது குலத்தில் அதாவது வேளாளர்குலத்திற் தவன் என்றபடி. தாகம்தீர்த்த செழியன் றது அப்பிரபுவின் அநேக தண்ணீர்ப்பந் சுட்டியும்பெருமையைச்சுட்டியும் என்க. யன் என்றது செழியனுக்கொப்பானவன் படி. கந்தருவம், கந்துகம், கோணம், கெ கோடை,குந்தம், பாடலம், மா, சடிலம்,கி யென்பன குதிரையின் பற்பல பெய இவை மற்றப்பொருள்களையும் குறி மாதலின் அவற்றைக் குறிப்பாற்பிரித்து கும்படி 'பாடாத' முதலிய அடைமொழிக கொடுத்தார். அவற்றின் மறுபொரு முறையே, இசை, பந்து, வளைந்தவாள், வகைப்பறவை, வேனிற்காலம்,ஈட்டி, பா பூ, மாமரம், சடை, கிளி என்பனவா அதாவது எனக்கோர்குதிரை பரிசுகொடுத் வேண்டுமென்று கூறியதாகும்.

(இன்னும் வரும்.)

---

## Short Story.

## சௌந்தராநந்தா.

---

பூர்வீக இந்து சமஸ்தானங்களில் பெற்று விளங்கிய விஜய நகரத்தைச் சார் துங்கபத்ரா தீரவாசமாகிய ஒரு கிராமமுண் அது நீர்வளம், நிலவளம் பெற்று சிறப்புற் ருந்ததால் பற்பல மரம் செடி கொடிகளு பூஞ்சோலைகளும், பட்சி இனங்களும் நிறைய பெற்று வெகு ரமணீயமாய் இருந்தது, அதி தனபாலனென்னும் ஓர் வணிகனுக்கு சர்வச பத்துக்கள் இருந்தாலும் மக்கட்பேறு இல்லா யாதலின் துக்கசாகரத்தில் ஆழ்ந்தவனாய் தக் பெரியோர்களை வரவழைத்து தனது குறை யைச் சொல்லிக்கொண்டான். அவர்க அவனைப் பலவித தானதருமங்களைச் செய்ய சொல்லி தினந்தோறும் அங்குள்ள காளி கோவிலை வலம்வந்து அம்மனை தரிசித்துப் போம்படி கட்டளையிட்டார்கள். அந்த தன

ர் தனக்குச் சொல்லியபிரகாரம் செய்து அந்ததேவிமனம் உவந்துஒருபுத்திரன் ாகும்படி அனுக்ரஹித்தாள். நாளா யில் அழகே உரு எடுத்தாற்போல் சுந்தரவடிவுள்ள ஓர் புத்திரன் பிறந்தான். னர் இச்செய்திகேட்டதும் மிக்க களிப் தி வேண்டியஅளவு அந்தணர்களுக்கும், யோர்க்கும் தானங்கள்செய்து அந்நாளை பெரிய உற்சவமாகபாவித்து சிறப்புச் தான். அக்குழந்தையின் சௌந்திரி தைப்பற்றி அதற்கு சௌந்திரனென நாம ணஞ்செய்யப்பட்டது. தனபாலன் வி கருணம்பாள் என்பவள் குழந்தையை ாற்றூட்டி விட்டு நாளொருமேனியும் ழுதொரு வண்ணமுமாய் கண்ணுக்குக் ணாய் வளர்த்திவந்தாள். அதிக செல்வ யும் சிறிதும் கண்டிக்கப்படாமலும் வளர்ந்த ல் அவன் பல துர்நடத்தைகளை அனுசரிக் தொடங்கவே பெற்றோர்களின் மனது சலமடைந்தது. கெட்ட சகவாசம் றவே சௌந்திரன் நடத்தையும் வரவர தற்கேற்ப மாறி வந்தது. துங்கபத்திரா ரையினின்று சுமார் 2-மைல் தூரத்திலுள்ள ரு ஊரில் ஆடல், பாடல் முதலியவைகளிற் தேர்ச்சியுடைந்து ஆடவர்களை மயக்கித் தன் சமாக்கிக்கொள்ளும் வித்தையில் நிபுணளாய் ருந்த அம்புஜம் என்ற ஒரு விலைமகள் ருந்தாள். சவுந்திரன் வேடிக்கையாக ரசல் போட்டுக்கொண்டு தன் தோழர் ளோடு எதிர்கரையடைந்தான். வெகுநாளாய் ந்த பாலகனை எவ்வாருவது வசப்படுத்திக் காண்டு தான் பொருள்தேடக் கருதியவளாய் இருந்தமையால் அவள் தன்னை ஆடை பரணங்களால் அலங்கரித்துக்கொண்டு னது உத்தியான வனத்தில் வீணைவாசித்துக் கொண்டு பாடத்தொடங்கினாள். சௌந்திரன் கரைசேர்ந்ததும் வீணாகானத்தைக் கேட்டு அதிக ஆவல்கொண்டு தன்கூடவந்த சிநேகிதர்களை எண்ணிப்பாராமல் ஒருவனாக அவ்விடம் போய்ச்சேர்ந்தான். அதிக பணக்கார மகனென முன்னமே தெரிந்திருந்த அவள் சௌந்திரனுக்கு உபசாரஞ்செய்து ஒருஉயர்ந்த ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்தாள். அவன் அவளது பாட்டுக்கேட்டு மதிமயங்கி தினமும் அவன் தன்ஊரைவிட்டு இவளிடம் உத்தியான வனத்திற்கு வந்துகொண்டிருந்தான். சவுந்திரன் சிநேகிதர்கள், உற்றார், பெற்றோர் என்ன புத்திசொன்னபோதிலும் தன் போக்குப் படியே நடந்துவந்தான். வீட்டில்உள்ள சம்பத்துக்களை எல்லாம் அம்புஜமிடம் சேர்த்துவிட்டான். வயதுசென்ற அவன் தகப்பனார் சதா துக்கசாகரத்தில் இருந்தவராதலால் திடீரென உயிரை இழந்தனர். சவுந்திரன் வீட்டில் இல்லாமல் எப்போதும்போல அம்புஜமிடமே இருந்தான். அவனுடைய உயிர்த்தோழர்கள் அவளிடம்சென்று இறந்துபோன தனபாலனிட உத்தரகிரியைகளை செய்யும் காலபரியந்தமாவது, சவுந்தரனை யனுப்பவேண்டுமென்று வெகுவாய்க் கேட்டுக்கொண்டனர். அம்புஜம் மனது மெழுகுபோல் உருகி சவுந்தரனைப் பார்த்து பலவாறு தேற்றிப் போகச்செய்தாள். அவன் ஒருகணமேனும் விட்டுப்பிரிய மனமில்லாதவனாய் இருந்தபோதிலும் நிர்ப்பந்தத்தின்மேல் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு தன் பதியடைந்து தன் தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய சிரார்த்தமுதலிய சடங்குகளைச் செய்துமுடித்துக்கொண்டு அன்றிரவே ஆற்றைக்கடக்கவெண்ணினான். வானத்தில் நீருண்ட மேகங்கள் கவிந்துகொண்டு பேரிருள் சூழ காற்றும், இடியும், மின்னலும் அதிகரிக்க தாரை தாரையாய் பெருத்தமழை அடித்துக் கொண்டிருந்தது. வெளியே ஜீவராசிக்குள் யாதொன்றும் தலைநீட்டக்கூடாதபடி அவ்வளவு பயங்கரமாகவிருந்தது. மணி பன்னிரண்டாய்விட்டது. இதை எல்லாம் நம்முடைய சவுந்திரன் பாராட்டாமல் தனிமையாய் மழையில் அடிபட்டு அனேகவிடங்களில் கால்சறுக்கிவிழுந்து தட்டித்தடுமாறி தாம்பரபரணீதீரம் வந்தடைந்தான். அப்போது ஆறு பெருக்கெடுத்து கோஷித்திருக்கக்

கண்டான். நீந்துவதில் மிக்க தீரனாதலால் உடனே ஆற்றில்வீழ்ந்து அங்கே மிதந்துவந்த ஒன்றை மரக்கட்டையென அதை கையில் பிடித்துக்கொள்ள அதிர்ஷ்டவசத்தால் ஆறானது இவனை அம்புஜம் வீட்டிற்கெதிரில் கொண்டுவந்துவிட்டது. இக்கண்டத்திற்கு பிழைத்தேன் என்று மரக்கட்டையை ஓரிடத்தில் ஒதுக்கிவிட்டு கரைவந்து வஸ்திரங்களைக் களைந்து நன்றாய்ப்பிழிந்து கட்டிக் கொண்டு தான்கட்டிக்கொடுத்த பங்களாக்குள் நுழையப்பார்த்தான். சுற்றிலும் சுவர் கிளப்பப்பட்டிருந்தமையால் உள்ளே போகக்கூடவில்லை. வெளியேநின்று தொண்டைகிழிய கதறினபோதிலும் இவனது சப்தம் காற்று, மழை, இடி முதலியவற்றின் சப்தத்தில் மூழ்கிப்போயின. இருட்டோ எதிரில் வருவோர் இன்னாரெனத்தெரியாதபடி அவ்வளவு அந்தகாரமாய் இருந்தது. சுவரில் வெகு நீளமாய் தொங்கின ஒன்றை கயிறெனப் பிடித்து உள்ளே முத்தத்தில் குதித்து அறையில் நுழைந்தான். அம்புஜம் விழித்தெழுந்து "ஆ இதென்ன ஆச்சரியம். எப்படி உள்ளே வந்தீர். இவ்வேளையில் ஆற்றைக் கடக்க உமக்கு படகு ஏது. வெளியே தலைநீட்டாதபடி மழை கொட்டுகிறதே. ஆ! பளா! வெகு நேர்த்தி. எட்ட இருந்துபேசும். கிட்டே வராதேயும். என்ன பிணம் நாற்றம் வீசுதே. எப்படி இந்த கோலத்தோடு சுவர்தாண்டி வந்தீர் எனப்படபடத்துப்பேசினாள். அதற்கு சவுந்திரன் தான் ஒரு கயிற்றைப்பற்றி வந்ததாகச் சொன்னான். கயிறே கிடையாதே எங்கே காட்டுமெனக் கைவிளக்கு ஒன்றை ஏற்றிக்கொண்டு வெளியேவரவே ஒரு பெரிய கருநாகப்பாம்பைப்பார்த்து திடுக்கிட்டாள். எப்படி ஆற்றைக்கிடந்தாரென அறியும்பொருட்டு கையிலுள்ள விளக்கோடு ஆற்றைப்பார்க்கவே ஓரத்தில் ஓர் அழுகிப்போன பிணம் மிதக்கக் கண்டு அதை மரக்கட்டையெனப்பிடித்து தன் பொருட்டு வந்தவனைப்பார்த்து பரிதாபத்தோடு நீர் இவ்வித பக்தியை உம்மைப்ப

டைத்த சர்வாபீஷ்ட பிரதாபகராகிய சர்
வரனிடம் செலுத்தினால் முக்தியடைய
பணியே கிடையாது. மின்னலைப்போ
தோன்றி மறையும் மாம்சத்தாலாகிய
டத்தையுடைய அடியாள்மீது இந்த வி
தகாதெனச் சொல்லவே அவன் மனதி
மாத்தில் ஆணி அறைந்தாற்போல் பட்டு
நிமிஷமே அவளை குருவாக எண்ணித்
செய்து துறவரம்பூண்டு சவுந்தரானந்த சு
களென சிறப்புப்பெயர்வாய்ந்து ஜீவகா
யந்தம் நிஷ்டையிலிருந்து ஜீவன்முக்த
விளங்கி விதேஹமுக்தி யடைந்தார். இ
வாசிப்போர் ஒவ்வொருவரும் இவ்வுலகவ
கை இத்தன்மையதென நன்குணர்ந்து
பிசகி நடக்காவண்ணம் இளமை முதற்கொ
டே நன்னெறித் துறையைப்பற்றி தெ
பக்திபூண்டு காலங்கழித்து சுகமடைவார

எ. ஆர். சிவ...மய்ய

## REDUCTION CF MONEYORDER COMMISSION

## மணியார்டர் கமிஷன் குறைக்க பட்டது.

இந்தியா போஸ்டாபீஸின் டைரெக்ட
ஜெனரல் மிஸ்டர் ஏ. யூ. பான்ஷா கையொப
மிட்டபின் வரும் விளம்பரம் விவேகசிந்
மணியின் பிரசுரிக்கும்படி நமக்கு அனுப்
பட்டிருக்கிறது. இந்த விளம்பரம் நமது சந்
தாரர்களுக்கெல்லாம் மிகவும் அனுகூல
வதே. இனி நமது சந்தாதாரர்கள் அந்தந்
வருஷத்து சந்தாவை உடனுக்குடனே யனுப்
வர இது ஒரு தூண்டுதலாக விருக்குமென்
நம்புகிறோம்.

"1902-ம்௵ ஏப்ரல்மீ 1௳ யிலும் அதற்
குப் பின்தேதிகளிலும் 5-ரூபாய்க்கு மேல்பட
மல் செய்யப்படும் (உள்நாட்டு) மணியார்ட
களுக்கு, கமிஷன் 2-அணாவிற்கு பிதிலாக, ஒ
அணா வாங்கப்படும். 5-ரூபாய்க்கு மேற்பட்
டிருக்கிற தொகைகளடங்கிய மணியார்டர்களின்

...கன் இப்பொழுது வழக்கப்பிரகாரம் வாங்கப்படுகிற துகைதான்.

... மேற்கூறிய அல்லது அதற்கு பிந்திய ...திகள்முதல் 5-ரூபாய்க்கு மேற்படாமல் ...க்கப்பட்டிருக்கிற துகைகளையுடைய வாலி...யபில் உருபடிகளின் சார்ஜ் 2-அணாவுக்கு ...லாக ஒரு அணுவாக குறைக்கப்பட்டிருக்...து. வசூல்செய்யப்படும் துகை 5-ரூபாய் ... மேற்பட்டிருந்தால் வழக்கப்பிரகாரம் இப்...ழுது வாங்கப்படுகிற பிரகாரம் சார்ஜ்செய்...படும்."

## Some Intensting Items.

## சில விநோதவிஷயங்கள்.

1. மனிதனது எலும்புக்கூட்டை நிறுத்துப் ...ர்த்தால் சராசரி 14-பவுண்டு நிறையிருக்கும்.

2. மனிதன் மூளை மற்ற எந்தப்பிராணியிலும் ...ண்டுபங்கு பெரிதாயிருக்கும்.

3. ஸ்காத்லாந்தியர் மற்றத்தேயத்தாரை விட ...யரத்திலும் கனத்திலும் மிஞ்சினவர்கள். அவர்கள் ...யரம் 5-அடி 9-அங்குலமாகும், உடல் நிறை 150-பௌண்டாம். பிரஞ்சுக்காரர் 136-பௌண்டும், ஜர்மானியர் 146-பௌண்டும் நிறையுள்ளவர்.

4. மனிதருக்குச் சராசரி பற்கள் 32, பால்யத்தில் பற்கள் குறைந்தும் வளரவளர அதிகப்பட்டும் வரும்.

5. மனிதன் மினிட்டொன்றுக்கு 20-தரம் மூச்சுவிடுவான். மணிக்கு 1,200-தரம் ஆகிறது.

6. நாம் மூச்சுவிடும் வாயுவில் 100-ல் 40.8-பங்கு கரியமிலவாயுவென்னும் விஷவாயு கலந்திருக்கும்.

7. குழந்தைகளுக்கு நாடி அதிகவேகமாயடித்துக்கொள்ளும். மினிட்டுக்கு 120-தரம் அடித்துக்கொள்ளும். முதிர்ந்தவர்களுக்கு 80-தரம் அடித்துக்கொள்ளும். 60-வயதில் நாடி மினிட்டுக்கு 60-தரம் அடித்துக்கொள்ளும். ஸ்திரீகளுக்குப் புருஷர்களைவிட விரைவாய் அடித்துக்கொள்ளும்.

8. உலகிலுள்ள மணிகள் எல்லாவற்றிலும் பெரிது உருஷியதேசத்தில் மாஸ்கோ (Moscou) நகரில் உள்ள மணி. இதன் நிறை 220-டன். ஆனால் இம்மணி இப்போது உடைந்துபோயிருக்கிறது. இவ்வூரிலேயே 110-டன் நிறையுள்ள இன்னொருமணியுள்ளது. இது பெருமணிகளில் இரண்டாவதாகும். நவகரோட் (Novagorod) என்னும் இன்னொரு ருஷிய நகரில் 31-டன் நிறையுள்ள ஒரு மணியிருக்கின்றது. ஐரோப்பிய தேசங்களில் உள்ள மற்றமணிகளெல்லாம் இவற்றிற் சிறியவைகளே. லண்டன் நகரில் ஸெண்ட்பால்ஸ் (St. Paul's) என்னும் கோயிலில் கட்டியிருக்கும் மணியும் பெரிதே. கிட்டத்தட்ட 17-டன் நிறையுள்ளது. நாதவிசேஷத்தைப் பார்க்கும்போது ஸெண்ட்பால்ஸ் மணியும், மான்செஸ்டர் நகரில் ஒரு மணியும் மிகச் சிறந்தவை என்கிறார்கள். மணிகள் வார்ப்பதில் பர்மாதேசத்தார் பேர்பெற்றவர்களென்கிறார்கள். இவர்கள் ஐரோப்பியர்களைப்போல வார்க்க வல்லவர்களாகத்தோன்றுது.

9. ஆனைக்கு வயது-200, ஒட்டகைக்கு 40, குதிரைக்கு 30, மாட்டிற்கு 20, நாய்க்கு 12, பூனைக்கு 10, தவளைக்கு 15, கிளிக்கு 100, திமிங்கிலத்துக்கு 400.

10. பருந்து மணிக்கு 100 - மைல்வீதமும், காக்கை 25-மைல்வீதமும், புறா 60-மைல்வீதமும் போகும்.

11. முயலின் குடும்பவிருத்தி மிகவும் ஆச்சரியமானது. பிறந்து ஆறுமாதத்துக்கெல்லாம், ஈன ஆரம்பிக்கும். தடவைக்கு 4-முதல் 12-வரையில் குட்டிகள்போடும். வருஷத்தில் 7-தரம் ஈனும்! கிரமமாக உயிரோடிருந்து, சந்ததிகளும் கூடச் சரியாக ஈனுமேயாயின் ஆண் பெண்ணாகிய ஒரு சோடி முயலினால் 4-வருஷகாலத்தில் 12-லக்ஷம் முயல்கள் உற்பத்தியாகும்.

12. பன்றிகளின் விஷயமும் மிக்க ஆச்சரியமானதே. பன்றிகள் 15, 20-வயசு உயிரோடிருக்கும், 9, 10, 11-மாசத்தில் குட்டிபோட ஆரம்பிக்கும். ஒரு சோடுப்பன்றியினால் தடவைக்கு 6-வீதம் கணக்கிட்டாலும் 10-வருஷகாலத்தில் 60-லக்ஷம் பன்றிகளின் சம்சாரம் ஏற்படும். இது வீண்வார்த்தையன்று. ஒரேபன்றிக்கு இரண்டு வருஷத்தில் 4,616-குட்டிகளின் சந்ததி உண்டாயிற்றென்று கேள்விப்படுகிறோம். கோடீச்வரராகக் கருதுவோருக்குப் பன்றி வியாபாரம்செய்தல் விசேஷமாகும். ஆயிரம் ஏகரா நிலம்சம்பாதித்து 100-பன்றிகளோடாரம்பித்தால் 5-வருஷத்தில் 4, 5-லக்ஷம் ரூபாய் சம்பாதிக்கலாம்.

## Current News.

## விசேஷ வர்த்தமானங்கள்.

1. லக்னோ நகரத்தில் கோவிந்தப்பிரஸாத பஷர்கவா என்பவ ரொருவரால் இரும்புவேலைகள்

ஏராளமாகச் செய்விக்கப்பட்டு வருகின்றன. இவர் அந்நகரில் உள்ள மியூஸியம் (Museum) என்னும் பல பொருட்காட்சிச்சாலைக்குத் தம்மாற் செய்யப்பட்ட போலி ரயில்வண்டி யொன்றை வெகுமதியாகக் கொடுத்தனர். இவர் இப்போது லண்டன் நகரிலுள்ள இஞ்சினீயர் சங்கத்தாரின் மெம்பராக அவர்களால் தெரிந்து நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

---

2. பசிபிக் மஹாசமுத்திரத்தில் நிரக்ஷ ரேகைக்கு 30-மைல் தூரத்தில் 'சமுத்திரதீபம், (Ocean Island) என்று ஒரு தீவு புதிதாக பிரிடிஷ் துரைத்தனத்தாரால் சம்பாதிக்கப்பட்டுள்ளது. இத்தீவில் (Phosphates) என்னும் உலோகம் மிகுதியாகக் காணப்படுகின்றதாம்.

---

3. இதற்குமுன் நம்மவர் ஒருவரும் பெறாத 'சீனியர் ராங்லர்' (Senior Wrangler) என்னும் வித்யாபட்டத்தைப்பெற்றுக் கணிதசாஸ்திரத்தில் மகாவல்லவரென்று பெயர்பெற்ற பரஞ்ச்பீ என்பவர் பம்பாய் சமஸ்தானத்தைச் சேர்ந்தவர். இவர் மகா நற்குணமுடையவர், மிக்க அடக்கவணக்கமும் தேசாபிமானமும் சுயமதத்தில் பற்றும் உடையவர். சீமையிலிருந்து திரும்பிவந்ததும் நேரே தம் மூருக்குச்சென்று தமது வயோதிகராகிய பிதாவைக்கண்டு நமஸ்கரித்து அவரது ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டு மற்றக்காரியங்களை ஆரம்பித்தாராம். ஐரோப்பிய வழக்கங்களில் பழகினவர் தமது பூர்வாசாரத்தைவிடாமல் கைப்பற்றி ஒழுகுவது மிகவும் மெச்சத்தக்கதே.

---

4. எட்மண்டு ராத்ஸ்சைல்ட் என்னும் ஒரு இங்கிலீஷ் பிரபுவும் அவர் மனைவியும் இப்போது நம் தேசத்தைப்பார்த்துப் போகும்படி வந்திருக்கின்றனர். இவர் மிக்க தனவான் என்பது பலருக்கும் தெரிந்தவிஷயமே. செல்வத்துக்குத் தக்கபடித் தர்மமும் உள்ளவர் என்று தோன்றும். காசநோயால் வருந்துகின்ற யூதகுலத்தாருக்கு வைத்தியம் செய்து போஷிக்கும்படி தர்மசாலை யொன்றை ஏற்படுத்தும்பொருட்டு ஐம்பதினாயிரம் பவுன் இவர் மனைவி கொடுத்தாராம். இன்னம் இதுவிஷயமாக வேண்டிவரும் செலவுகளெல்லாம் தாம் கொடுத்து ஈடுபண்ணுவதாக வாக்களித்திருக்கிறாராம். இது தவிர இன்னம் பற்பல தர்மங்களையும் செய்கின்றாராம். பொருளை நல்வழியாற் சம்பாதித்துத் தர்மார்த்தமாக உபயோகப்படுத்துவோர் பெருமையே பெருமை.

---

5. இன்னொருவர் இவரிலும் தர்மவான். அமெரிகா தேசத்தில் நியூயார்க் பட்டணத்தில் 'க்ரிஸ்டியன் ஹெரால்ட்' என்னும் பத்திரிகையின் தலைவராகிய டாக்டர் க்ளாக்ஷ் என்னும் தர்ம... இத்தேசத்தில் தாய்தந்தையரில்லாத பிள்ளை... ஐயாயிரம் பேர்களுக்கு முதலில் ஒரு வருஷம் போஷிக்கவேண்டிய செலவுகளைக் கொடுப்பதா... சொல்லிப் பின்பு அத்தருமத்தை ஐந்து வருஷம் நடப்பிப்பதாக ஒப்புக்கொண்டிருக்கின்றனராம். இதன் பொருட்டு நன்னான்கு மாதத்துக்கொருதரம் 25,000 டாலர் (டாலரென்பது ரூ. 3-1...) வீதம் கொடுத்துவருகின்றாராம். இது வரையில் நான்குதடவை இப்பெருந்தொகையை அனுப்பியிருக்கிறார். இன்னம் பதினொருதடவை அனுப்ப இருக்கிறார். இதுபோலவே சீனதேசத்தும் ஒரு தருமகாரியத்தைச் செய்யக்கருதியிருக்கிறாராம்.

---

6. எகிப்து தேசத்தில் அரசிறை இலாகாவை சார்ந்த உத்யோகஸ்தராகிய ஸர். எர்னஸ்ட் காஸ... என்பவர் இரண்டு லக்ஷம் பவுன் தர்மச் செலவுக்காகக் கொடுத்திருக்கிறாராம். இப்பெருந்தொகையைக்கொண்டு க்ஷயரோகத்தாற் பீடிக்கப்பட்டவர்களுக்குபயோகமாகும்படி வைத்தியசாலை ஒன்று ஏற்படுத்தும்படி நம்மரசர் உத்தேசித்திருக்கிறாராம். இவர் தற்காலம் அரசருக்கு அதிப்பிரியமான நே...ராம்.

---

7. இவ்வருஷம் சென்னை யூநிவர்ஸிடி எப். ஏ. பரிக்ஷைக்குப் போனவர்கள் 1,923 - பேர். இவர்களில் தேறினவர் 695-பேர், 100-க்கு 36-த்திட்டம் ஆகிறது. மங்களூர், தஞ்சாவூர், திருநெல்வேலி, திரிச்சினாப்பள்ளி, திருவனந்தபுரம், எர்னுகுளம், விஜயநகரம் என்னும் ஊர்களில் சுமாராய்த் தேறியிருக்கிறார்கள். பாதிக்குமேல் தேறினவர்கள் எங்கும் இல்லை.

---

8. வித்யா இலாகாவைச்சேர்ந்த ம-rா-ள-ஸ்ரீ, B. ஹநுமந்தராவ்வர்களுடைய புத்திரராகிய பீம

ராவவர்கள் பர்மாதேசத்தில் அஸிஸ்டன்டு களண்டன்ட் ஜனரலாக நியமிக்கப்பட்டிருக் றனர். இவர் சிறுவயதில் பெரிய உத்தியோகத் பெற்றும் பந்துமித்திரர்களைவிட்டு நெடுந்து போகவேண்டிவந்தது சிறிது விசனிக்கத் தே. பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளியமரத் று என்றபடி சர்க்கார் உத்தியோகத்தில் ந்தபின் அவர்கள் நியமித்தவிடத்துக்குப் த்தானேவேண்டும். பின்வாங்கமுடியுமா?

---

9. பங்காளத்தில் தரணிப்ரசாத ஜோதிஷி என் ஜோசியர் ஒருவர் 1902-ம் வருஷமாகிய இவ் ஷத்துப் பலாபலங்களைச் சொல்லுமிடத்து வர் யுத்தம் இப்போதுள்ள மந்திரிகள் நீங்கின முடிவாகுமென்றும், பிரஞ்சுக்காரரின் தூண்டு னல் இங்கிலாந்துக்கும் ருஷ்யாவுக்கும் கலகம் நமென்றும், சீனு, மத்தியதரைக்கடல், ஹீரட், ரிசிக்குடா என்னும் இடங்களில் எண்ணிறந்த னைகள் யுத்தசன்னத்தமாய் நிற்குமென்றும் வுகின்றனர். மேலும், இவ்வருஷத்தில் ப்ளேக் ராப்பாவில் சிற்சில இடங்களில் அதிகரித்து தியாவில் குறையுமாம். ஐரோப்பியவர்த்தகர்க ங்கு இந்து வர்த்தகர்களைக்காட்டிலும் அதிக நஷ் ண்டாகும். நெல்விலை வருஷக்கடைசியில் ஏறு ம். பங்காளம், பொம்பாய், சென்னை, மத்திய ந்தியா என்னும் இடங்களில் பஞ்சமுண்டாகி வரைத்தளத்தாரின் முயற்சியால் அதிக உயிர்ச் சேதம் உண்டாகாதாம். இன்னம் பற்பல விஷயங் ளைப்பற்றி இவர் முன்னடித் தெரிவிக்கின்றனர். டந்தன்றைக்கு நிச்சயம். அன்றியும் இந்த ஜோசி த்தில் குறிப்பாக ஒன்றையும் காணேம். ஆனே மாற்றுகிற ஜோசியமாயிருக்கிறது.

---

10. சென்னை பீபில்ஸ் பார்க் பேர் (Madras air) என்னும் வேடிக்கைக் கடைகள் முன் அக்கி ாதையால் அநேக உயிர்ச்சேதம் நேரிட்டதுமுதல் மார் 15-வருஷமாக நிறுத்தப்பட்டு, இவ்வருஷம் மறுபடியும் ஏற்படுத்தப்பட்டன. இதில் கிடைத்த வரும்படி ரூ. 13,681. இதில் செலவுபோக, ரூ. 3,000 மீருமாம். இத்தொகையில் இச்சந்தை நடந்த காலத்தில் அபாய நஷ்டங்கள் வாராமல் சிராகப் பாதுகாத்ததற்காக மிஸ்டர் எல்லிஸ் என்னும் போலிஸ் உத்தியோகஸ்தருக்கு ரூ. 150 வெகுமதி கொடுக்கும்படித் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதாம்.

11. நமது மாகூிமைதங்கிய ராஜசக்கிரவர்த்தியைக் கௌரவிப்பதற்காக அவர் மகுடாபிஷேக காலத்தில், சென்னை நகரத்தில் லாட் கிருஷ்ண தாஸ் பாலமுகுந்ததாஸென்னும் தனப்பிரபு சக்கிரவர்த்தியின் விக்கிரகமொன்று தம் சொந்தச்செலவில் செய்துவைக்கத் தீர்மானித்து அதற்குத்தக்க பிரயத்தனங்களைச் செய்துவருகின்றனர். பொருளுடையவர் பொருளினுலும், கல்வியுடையவர் கல்வியாலும் அவரவர்க்கியன்ற அளவில் தத்தம் ராஜபத்தியை வெளியிட்டுக்காட்டுதல் மிகவும் மெச்சத்தக்கதே. குடிகளுக்கு அரசரிடத்தில் பத்திவிச்வாசமுண்டானல் அரசருக்கும் குடிகளிடத்தில் விசுவாசமும் அருளும் உண்டாகி அவர்களுடைய க்ஷேமத்தை நாடுவரென்பதில் சந்தேகமில்லை.

---

12. கர்ஸன் பெருமாட்டியின் பிரேரணையால் விக்டோரியா மஹாராணியின் ஞாபகார்த்தமாகப் பெண்பாலாருக் குபயோகமாகும்படி மருத்துவச்சிகளைக் கற்பித்துத் திறப்படுத்தக்கருதிச்சேர்த்து வரும் தொகை இப்போது ரூ. 5,72,000 வரையில் சேர்ந்திருக்கிறது. இத்தொகையால் வருஷம் ஒன்றுக்கு ரூ. 18,307 வருமானம் ஏற்படும். இது மிகவும் சந்தோஷிக்கத்தக்கது.

---

13. சென்ற கல்கத்தா காங்க்ரஸ்ஸில் காட்டப்பட்ட கைத்தொழில் விற்பனப் பொருட்காட்சியில் ஒன்று மிகவும் கவனிக்கத்தக்கது. அல்மோரா நகரில் உள்ள ஸ்ரீ கிருஷ்ண ஜோஷி என்பவர் வெய்யிற்சூட்டினுல் விறகுச்செலவில்லாதபடிச் சமையல் செய்யும்படி ஒரு நூதனமான கருவி கண்டுபிடித்துக் காட்டினராம். இவ்வெந்திரத்தையே போதுமான அளவு பெரிதாகச் செய்யும்பக்ஷத்தில் இது நீராவி எந்திரங்களுக்குக்கூட உபயோகப்படுமாம். இக்கருவி பயன்பட்டு வழக்கத்தில் வருமாயின் இவர் பெயர் லோகப்பிரசித்தமாகு மென்பதில் தடையில்லை.

---

14. ஜப்பான் தேசத்தின் மாஜி பிரதான மந்திரியாகிய மார்க்விஸ் ஐடோ என்பவர் ஐரோப்பாவில் அநேக ராஜ்யங்களைப் பார்த்துக்கொண்டு இப்போது இங்கிலாந்துக்குப் போயிருக்கிறர். இவரை ஜப்பானை உண்டுபண்ணினவர் என்றும், ஜப்பான் 'பிஸ்மார்க்' என்றும் சொல்லுவார்கள். இவருக்கு

இப்போது அறுபது வயதிருக்கும். முப்பது வருஷத்துக்குமுன் இவர் இங்கிலாந்துக்குப் போக நேர்ந்ததால் அங்குள்ள நடவடிக்கைகளைக்கண்டு அதுபோலவே தமது தேசத்தையும் முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்னும் எண்ணமுடையவராயினர். தம் தேசத்துக்குத் திரும்பிச்சென்று துரைத்தனகாரியங்களில் அதி முயற்சியெடுத்துக் கொண்டு 1885-ம் வருஷத்தில் முதன் மந்திரியானர். இவர்தான் அந்தஸ்தானத்தை முதல்முதல் பெற்றவர். மறுபடியும் ஐரோப்பாவுக்குச்சென்று ராஜ்யசட்டதிட்டங்களை ஆராய்ந்து கற்றுக்கொண்டுவந்து 1891-ம் வருஷத்தில் ஜப்பான் தேசத்தின் முதல் பார்லிமெண்டை ஸ்தாபித்தார். 1898-ம் வருஷத்தில் சிறிதுகாலம் முதன் மந்திரியாயிருந்தார். இங்கிலாந்தில் இவருக்கு மிக்க மரியாதை நடக்கிறது.

---

15. பீஷாவார் வைத்தியசாலையில் சில நாளைக்குமுன் அற்புதமான சத்திரப்பிரயோகம் செய்யப்பட்டது. அப்கானொருவன் முப்பது வயதுள்ளவன், பார்வைக்குத் திடகாத்திரனனவன். காபூல் அமீரின் உத்தியோகஸ்தர்களுக்குப்பயந்து தன் கையிலிருந்த ஐம்பத்தைந்து ரூபாயையும் வயிற்றில் செலுத்திவிட்டானும்! ஆ! ஆ! பணம்போட்டுப் பத்திரப்படுத்த என்ன உபாயம்! பின்பு அப்பணம் வெளியில் வரும்படி ஆனமட்டும் பேதிக்குச் சாப்பிட்டும் பிரயோசனமில்லாமல் போகவே கடைசியில் வயிற்றைக்கிழித்துப் பணத்தை எடுக்கவேண்டியதாயிற்று. இந்த வித்தை ஐரோப்பியர்களன்றி வேறேயாவர் அறிவார்கள்? க்ளோரோபாரம் என்னும் மயக்கமருந்தைக்கொடுத்து அவன் போதையின்றி மயங்கிக்கிடக்கையில் எவ்வளவோ சாதகமாக வயிற்றைக்கிழித்து அந்த ஆஸ்பத்திரி டாக்டராகிய டாக்டர் டென்னிஸ் என்பவர் பணத்தை எடுத்து அவனுக்குச்சிகிற்சைசெய்தாராம். அந்த ஆப்கானியனுக்குப் பணமிழந்தவிசனமேயொழிய வேறே உடம்பைப்பற்றிச் சிந்தையில்லையாம்! பணத்தைத்திரும்பக்கண்டதும் அவனுக்குண்டான குதூகலத்தை அடக்கமுடியவில்லையாம்! இப்படியும் பணமே பிராணனிலும் பெரிதென்று நினைப்பவர்கள் உலகில் உண்டா!

---

16. இப்போது சிலகாலமாய்க் காயிதத்தைச் சுருட்டி நெருப்புக்குச்சிகள் செய்து வருகிறார்களாம். மரத்தினல் செய்தவற்றைவிட அதிக நேரம் எரிவதன்றி விலையும் அவற்றைவிட நயமாயிருக்கிறதாம். இவை நம்மூர்களுக்கு இன்னம் வாரா[...]க்குக்காரணம் தெரியவில்லை. காலணுவுக்கி[...] பெட்டிகள் கிடைத்தற்குமாறுக மூன்று அ[...] நான்கு பெட்டிகள் கிடைக்குமாயின் ஏழை ஜ[...]ளுக்கு எவ்வளவு அனுகூலமாயிருக்கும்?

---

17. இதாலி தேசத்தில் மிலன் என்னும் [...]ணத்தில் முற்றிலும் ரொட்டியினல் செய்யப[...] விநோதமான கடியாரம் ஒன்றிருக்கிறதாம். இந்துதேசத்தான் ஒருவனுற் செய்யப்பட்ட[...] இதைச் செய்துமுடிக்க மூன்றுவருஷம் பி[...] தாம். இது அளவில் கூடியவரையிற் பெரித[...] மணியைச் சரியாகப்பிழையின்றிக் காட்டியும் [...]கின்றதாம். நம்மவர்கள் இவ்வுபயோகமற்ற வி[...]திரங்களைவிட்டுப் பல்லோர்க்கும் பயன்படும்[...]யான விஷயங்களில் எப்போது தம் மூக்கத்[...] செலுத்துவார்களோ அறியேம்.

---

18. யுத்தகளத்தில் காயம்பட்டுவருந்திய ப[...] வீரர்களுக்கும் வேறு நோயாளிகளுக்கும் ஔஷத[...]களைக்கொடுத்துப் போஷிப்பதில் மிக்க பேர்பெ[...]வராகிய மிஸ். நைடிங்கேல் என்னும் மாதுசிரே[...]ணிக்கு இப்போது வயது எண்பத்தொன்றாகி[...] தேகம் தளர்ந்து பலவீனப்பட்டிருப்பினும் இ[...]மும் தமக்குப் பிரியமான பரோபகாரகார்யங்கள[...] சிரத்தை குறையவில்லை.

---

19. இப்போது அங்கிலேயர் சண்டையிட்டு[...] செயித்துக்கொண்ட டிரான்ஸ்வால் என்னும் தெ[...]ஞப்பிரிக்கா நாட்டில் பொன்னும் நிலக்கரியு[...] விசேஷமாக விளைகின்றன.

---

20. உரோம் பட்டணத்தில் போப் என்[...] உரோமன் காதலிக் கிரிஸ்தவமதத்துக்குத் தலைவ[...]யிருப்பவர் பெயர் 'லியோ.' இவர் வாசம்செய்கிற[...] 'வேடிகன்' என்னும் அரண்மனையில் பதினோரா[...]ரம் அறைகள் இருக்கின்றனவாம். அவ்வளவு அ[...]களில் இவர் உபயோகிப்பவை மூன்றேயாம். அவ[...]றுள் ஒன்று தமது இருக்கைக்கும், ஒன்று உ[...]கைக்கும், ஒன்று படுக்கைக்கும் உபயோகித்துவ[...]கின்றனராம். இம்மூன்று அறைகள்கூட மிக்[...] சிறியவைகளாம்.

---

## PUZZLES.
## விடுகதைகள்.

### I. RIDDLES—பிதிர்க்கேள்விகள்.

1. எந்த எண்ணைத் தரித்திரன் எனலாம்.
2. எந்தக்கை குழந்தைகளுக்கு பலம்.
3. எந்தக்கால் பின்திரும்பாது.
4. எந்தத்தானம் எவற்றினும் சிறந்தது.
5. எந்தக்கைக்கு வாயுள்ளது.

### II.

1. நாலெழுத்தாலேயான நற்பெயர் அரசனுக்கும்
ஆலமுண்டவனும் ஆதியக்கரம் சகரமாயின்
கோலவாரிதியாம் மற்றுக்குறித்தது நகரமாயின்
மேலுறு குபேரனுமே விண்டது நிகரமானல்.

2. செல்பவர்க் கெல்லாம் சேரும் நெறியதாம் மலையிற்றேன்றிப்
பல்வகைப் பயனும்தந்து பரவைமேவுவது மாமால்
நல்வகைப் பெயராய் நின்றேரெண்ணையும் நல்கி நிற்கும்
சொல்கமற்றிதை யிரண்டே அசைபினிற் சூழ்ந்துமாதோ.

3. இமையா திருகண்விழித்திருப்பினும்
எதிரிடையாக இசைக்கப்படுமே;
கயவாயொன்றே பெற்றதுவேனும்
பலவுளதாகப் பகர்ந்தி டப்படுமே;
நீரிற் பிறக்கும் மலரலதேனும்
அப்பெயராலே அறையப்படுமே;
பொன்னே யறியாப் புவியிடைவாழ்கினும்
பொன்னென்றது தான் புகலப்படுமே;
வரைபோற் பெரிய வுருவுடைத்தேனும்
ஊரும் ஜந்துவென் றுரைக்கப்படுமே;
எத்தனை யுடலம் பருத்துளதேனும்
சுத்த வெலும்பெனச் சொல்லப்படுமே;
மற்றிதுயாதோ வழுத்திடுவாயே.

4. உச்சியிற் குடுமி உடையேனுயினும்
நச்சிய சோழியன் நானுகேனே;
முக்கண் முகத்துப் பெற்றுளனுயினும்
மைக்க ருங்கழுத்தின் வானவனுகேன்;
திருகிப் பிழியத் தீமயில் தரினும்
பரிவுடனளிக்கும் பாற் பசுவல்லேன்;
உண்ணீருதவினும் ஊநுணியாகேன்;
எண்ணெயளிப்பினும் எள்ளாகேனே;

உள்வெளுத்திருப்பினும் வெண்மதியல்லேன் ;
ஓடுதாங்கினும் உண்ணேனிரந்து
நாடி யென்னை நவின்றிடுவாயே.

III. Charade—அசைநிரைச்சூட்டு.

1. நெய்விளக்கிருந்து திமிரொளிசெய்யும்.
2. திருமால்கையில் திகழ்ந்திடுபடையாம்.
முழுதுமோர் மன்னன் பெயராகும்மே.

IV. Beheaded Words—தலைவெட்டுமொழிகள்.

1. ஐந்தெழுத்தாலாம் சொல்லொன்றரியதோர் மலரைக்காட்டும் ;
முந்துறுமெழுத்தை நீக்கின் மொழியுமம் மலர்தான்பூக்கும்
நிந்தையில் வாவியாகும் ; முதலினைப் பின்னும்நீக்கின்
விந்தையென்சொல்வேன் மூன்றுமேவினும் நாசமாமே.

2. முப்பெயர் முழுதும் நிற்பினும்தொண்டர்
முதற்பெயரொன்றைக் குறைக்கினும்தொண்டர்
முதலிருபெயரையும் குறைக்கினும் அப்பொருள்
தனையே யுணர்த்தும் சாற்றுகவிதுவே.

V. An enigmatic question—விசித்திரக்கேள்வி.

காலால்நின்று காண்கினுமல்லது
தலைகீழாகத் தானுற நிற்பினும்
ஒருநிலையாயே யுற்றிருந்தரிய
பகடிசெய்வேன் எனைப்பகர்ந்திடுவாயே.

சென்ற நவம்பர் மாதத்துச் சஞ்சிகையில் உள்ள விடுகதைகளுக்கு விடை.

I.

1. அரசனுக்கு இருப்பிடம் அரமனை (அரைமனை) நமக்கு முழுமனை.
2. காது போனபோது.
3. சப்பாத்தியில்.
4. அகராதியில்.
5. அம்புலிமானுக்கு.
6. அய்யாக்குட்டிக்கு.

II.

1. முட்டையிட்டு.
2. பட்டுப்பட்டு.
3. பாய்ந்து பாய்ந்து.
4. பார்ப்பாரில்லாமல்.
5. இடித்திடித்து.

III.

சகுந்தம். சகுந்தம்=கழுகு ; குந்தம்=ஆயுதம் ; சந்தம்=அழகு.

IV.

1. முத்தம்—மணிச்சிறப்பு; காசு—மணிப்பொது; முத்தக்காசு—ஒரு கிழங்கு.
2. மருதம், தருமம்.

V.

முதுகு.
துறடு.
குடுவை.

VI.

போதமருள் பல்கலையும் பொற்புடனே யற்பொடுகல்
லாதவனுக் கில்லை யொளி.
ஆதவன்=சூரியன் என்று தொனிப்பொருள் தோன்றுதல் காண்க.
கல்லாதவனுக்கு அறிவில்லையென்பது கருத்து.

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### THE STORY OF SIR WALTER RALEIGH.

### ..ர் வால்தர் ராலி என்பவரின் கதை.

..உலகத்தில் பெருமையும் செல்வமும் ..டைதற்குப் படிப்பும் முயற்சியும் மாத்திரம் ..ந்தாற்போதாது. சமயோசிதமான காரி..மும் பேச்சும் ஒன்றுக்கும் பின்வாங்காத ..ரமும்கூட வேண்டும். படிப்போடும் முயற்..சியோடும் இக்குணங்களும் சிறந்திருக்கு..யின் பொன்மலருக்கு வாசனையும் சேர்ந்த ..போல இனிதாகப் பிரகாசிக்கும். இதற்குத் ..ருஷ்டாந்தம் ஒரு கதை சொல்வேன் கேளுங்..ள்.

..முன்னொருகாலத்தில் இங்கிலாந்திலே ..லிஸபெத் என்று ஒரு இராணி ராஜ்யபாரம் ..செய்துகொண்டிருந்தார். அக்காலத்தில் இரா..ணியைக்கண்டு ஒரு முக்கியமான சங்கதியைப் ..ற்றிப் பேசிவரும்படி இருவர் வாலிபர்கள் ..ரு பிரபுவால் அனுப்பப்பட்டார்கள். அவர்..ளில் ஒருவன் கோழைமனமுடையவன் ..ற்றவன் தைரியமும் சமயோசிதமும் சாமர்த்..யமுமுள்ளவன். முன்னவன் பெயர் ..ளவுண்டு பின்னவன் பெயர் வால்தர். இவர்..ளிருவரும் இராஜமாளிகையை அடுத்தபாத்..ரத்தில் இராணி அரண்மனையை விட்டுப் ..றப்பட்டு விநோதார்த்தமாகப் படவேறி நதி..யில் உலாவுவதற்குச் சித்தமாயிருந்தார். இவர்கள் வாயிலாளரை அடுத்து விசாரித்ததும் "ஆ! இப்போது அரண்மனைக்குள்ளே அரிப்பிரமாதிகள் வந்தாலும் போகமுடியாது. அரசியைக்காணுதற்கும் இது சமயம் அன்று. அப்புறம் செல்லுங்கள்." என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள். அப்போது பிளவுண்டு, "இனி நாம் இங்கே நிற்பதில் பிரயோசனமில்லை. வந்தவழியே திரும்பிச்சென்று நாம் கண்டவற்றைப் பிரபுவுடன் சொல்லிவிட வேண்டியதுதான். போவோம் வா." என்று பெருமூச்சுவிட்டுச்சொன்னான். அதற்கு வால்தர், "என்னதை நாம் கண்டுவிட்டோம்! இராணியின் படவும், அதில் அலங்காரமாய் நிற்கும் படவுகாரர்களும், பாராநிற்கும் சிப்பாய்களும் ஆகிய இவற்றையா போய்க் கண்டு வந்தோம் என்று சொல்லுவது? பிரபுவுக்கு கிரம்பத்திருப்தியாய்ப் போய்விடுமேல்லவா" என்றான்.

பிளவுண்டு.—"ஆனாலென்னபண்ணுகிறதாக யோசனை? பாராக்காரன் கையால் சவுக்கடிபடச்சொன்னாயா" என்றான்.

வால்தர்.—"அடியும் உதையும் நீ படு. நான் இராணியைக்கண்டு பேசிவிட்டுத்தான் வருவேன். உனக்கு அவசரமாயிருந்தால் நீ முன்னே நட" என்றான்.

இவர்கள் இப்படி விவாதித்துக்.. கையில் அரிக்காரர்கள் வெள்..

கையுமாய் முன்னடந்து 'பராக் பராக்' என்று ...க்கொண்டுவர இராணியார் அநேகபிரபுக் ...ளோடும் சிமாட்டிகளோடும் அரண்மனை வாயிலைவிட்டு நதிமுகமாக இவர்கள் நிற்கும் வழியே புறப்பட்டுவந்தார். மகா தைரியசாலியாகிய வால்தர் இருபுறமும் பாதையில் பாரு நிற்கிறவர்களையும் இலக்ஷியம்பண்ணாமல் அடுத்து நின்றுபார்த்துக்கொண்டிருந்தான். இவனிருந்த இடத்துக்குச் சமீபமாக இராணி வரும்போது, அங்கு முதல்நாள் பெய்தமழையால் சிறிது ஜலம் தேங்கிச்சேறாயிருந்தது. இராணி அவ்விடத்தை அடுத்ததும் அச்சேற்றில் கால்வைக்கச் சற்றேதியங்கினபோது, வால்தரென்னும் அவ்விளைஞன் நறுக்கென்று தான் மேலேபோத்திருந்த சால்வையை எடுத்து அவ்விடத்தில்விரித்து அரசியை எழுந்தருளலாமென்றான். இளைஞன் துணிவையும் சமயோசிதத்தையும் இராணிகண்டு ஆச்சரியப்பட்டு அதன்மேல் கால்வைத்து அப்பாற் சென்று ஒன்றும் சொல்லாமற்போய்விட்டார்.

பின்பு பிளவுண்டு வால்தரைப்பார்த்து, "அடே பைத்தியக்காரா, என்னகாரியம்செய்தாய்? திவ்வியமான சால்வையை வீணாகக் கெடுத்துக்கொண்டாயே" என்றான்.

வால்தர்.—"நல்லது நான் பைத்தியக்காரனென்பதும் நீ பயித்தியக்காரனென்பது இன்னம் சிறிதுபோதில் தெரியும் பொறு" என்றான்.

இதற்குள்ளே அரசி படகிலேறி சேவகன் ஒருவனைவிட்டு அவ்விளைஞனைக் கூட்டிவரும்படி ஆக்ஞாபித்தாள். அச்சேவகன் ஓடிவந்து இளைஞனையடுத்து, 'ஐயா உம்மைக் கூட்டி வரும்படி உத்திரவாயிருக்கிறது' என்றான்.

இளைஞனும் அவ்வாறே இராணியின் முன்னிலையில் சென்றபோது, இராணி அவனைப் பார்த்து, "மைந்த, நீ எனக்காக விலைபெற்ற சால்வையைக் கெடுத்துக்கொண்டாய். நீசெய்த உதவிக்காகச் சந்தோஷிக்கின்றேன்" என்றனர்.

அப்போது இளைஞன் "அரசியின் விஷயத்தில் பின்வாங்காமல் ஆவியையேனும் சமர்ப்பிப்பது குடிகளின் கடமையேயன்றோ?" என்றான்.

அதைக்கேட்டு இராணி இன்னம் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் மேலிட்டு "நீ எனக்குச் ... சுவி. வீண்போகாமல் உனக்குத்தக்க ...க்கின்றேன். அடே! ஆரடா அரிக்காரா, நமது காரியஸ்தரிடத்... சொல்லி இவ்விளைஞனுக்கு இதனி... உயர்ந்தஜோடு சால்வை கொடுக்கும்படி உத்திரவிட்டேனென்று சொல்" என்றார்.

அப்போது இளைஞன், "நான் தங்க... கேட்டுக்கொள்ளத்தகுமானால் இன்னொரு... விரும்புகிறேன்" என்று சொல்லு... இராணி அவனைத்தடுத்து, 'உனக்குப் ப... வேண்டுமானால் பணம் தருகிறேன். ஆயி... உன்போலும் வாலிபருக்குப் பணங்கொ... தல் மிகத் தீங்காகும். நீங்கள் கண்ட... துர்விநயம்செய்து சுகத்தைக் கெடுத்... கொள்ளுவீர்கள். ஆயினும் உனக்ககத்... மானால் பணமே கொடுக்கச்சொல்லுகிறே...' என்றார்.

அரசி சொல்லும்போது தடுத்துப்பேசு... நியாயமல்லவென்றிருந்த வால்தர் அவர்செ... விமுடித்ததும், அவரை நோக்கி "அரசீ, த... ளுடைய அநுக்கிரகத்தாலே எனக்கு அ... ளவு தரித்திரம் வரவில்லை, நான் வேண்டு... பணம் காசன்று. நான் பெறக்கூடுமா... இச்சால்வையை நான் தரித்துக்கொள்ள ... திரவுசெய்யின் அதுவே எனக்கு மேலான... சாகும்" என்றான்.

அரசி அதுகேட்டு, உன் சால்வையை நீ... துக்கொள்ள என் உத்திரவென்ன? என்ற...

அதற்கிளைஞன்.—'தங்கள் திருவடித்து... படிந்தமாத்திரத்திலே அச்சால்வை தங்... உடைமையாயிற்று. தங்களைப்போலும் ரா... குலத்தில் தோன்றினவர்களுக்சே தரித்... குரியது. என்னைப்போலும் எளியவர்க... குரியதன்று" என்றனன்.

அரசி அவ்வார்த்தையைக்கேட்டு நகை... துக்கொண்டு அவனுடைய யோகக்ஷேம... களைப் பின்னும் சிறிது விசாரித்து, அவ... டைய தீரத்தையும் சாமர்த்தியத்தையு... வியந்து அச்சால்வையைப் போர்த்து... கொள்ள உத்திரவுகொடுத்ததேயன்றி, ஓ... சுவர்ண மோதிரத்தையும் கொடுத்து அ... யும் தரித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்... னர்.

இவன்தான் பிற்காலத்தில் சர் வால்டர் ரா... என்று பிரசித்திபெற்றவன். 'ராலி' யென்... வர் தமது கல்வி கேள்விகளாலும் தைரிய... சாமர்த்தியங்களாலும் மேன்மைபெற்று அவ்... வரசியின் ஆஸ்தானத்தில் சிரோமணிபோல... விளங்கியிருந்தார்.